உ

ஸ்ரீவஹுமாரிஹுந்துணை.

# திருச்செந்தூர்
# வேலவன் கீர்த்தனைகள்.

கே. கைலாஸம் அய்யரால்

வெளியிடப்பட்டது.

ஸ்ரீ "வாணீபூஷணம்" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது

1914

உ

வேலுமயிலுந்துணை

# திருச்செந்தூர்
# வேலவன் கீர்த்தனைகள்.



கே. கைலாஸம் அய்யரால்

வெளியிடப்பட்டது.



ஸ்ரீ "வாணீபூஷணம்" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது

1914



காபிரைட்] [ரிஜிஸ்டர்ட்




தெக்ஷிண தேசத்தில் இக்கலி காலத்துப் பிரத்தி யக்ஷக் கடவுளென்று யாவராலும் கருதப்படுங் கந்தனு ரமர்ந்தருளிய பல திவ்ய க்ஷேத்திரங்களில் திருச்செந்தூர் யென்னும் ஸ்தலம் சிரப்புப்பெற்று பணியும் பக்தர்பலருக் கும் நன்மை பயக்குந் திருப்பதியாயிருப்பது யாவருமறிந்த விஷயம். அவ்விடம் அமர்ந்தருளிய அருமுகவேலவர் தெரி சனங்காண ஒவ்வொரு ஆண்டும் நான் போய்வருவதில் ஓர் இரவில் அவர் திருவுருவங் கனவிற்றோன்றி தன்னைப் பாடிப்போற்ற வேணு மென்று அளித்த ஆக்ஞையை சிர மேற்கொண்டு யாதுமறியா நான் என் சிற்றறிவுக் கேற்ப சிலபாட்டுகள் செய்து அவைகளிற் சிலவற்றை அச்சுமூலம் வெளியிடத் துணிந்தேன். இவ்வாறு செய்தது லாபமாவது பெயராவது அடையும் பொருட்டல்ல. இப்பாட்டுக்களை பாடிவரும் பலர்பிசகாய் பாடுவதால் தான் அச்சிட அவா வுற்றது. இப்பவும் வார்த்தை பிசகுகள் பலவுளவென்று அறிவேன். அச்சிடுமவசர நிமித்தமும் அலுவல்கள் நிமித்த மும் அவைகளை இப்போது திருத்த ஸரிப்படவில்லை. அடுத்த பதிப்பில் பழுதறப்பதிப்பேன். ஷண்முகன் பாட்டு பலர் வாயிலுமிருக்க வேணு மென்ற ஆசையை சிறிதாவது அடைந்தேனானல் இதன் பயன் பெருவேன்.

நான் இப்பாட்டுகளை அச்சிட திருச்சியில் ஒருவரிட னுப்ப அவர்மூலம் பலபேர் காலக்ஷேபங்களிலும் கூட

பிசகாய்ப்பாடும் படியாகி இவைகள் அச்சிடபடவுமில்லை பிறகு இப்பாட்டுக்களை பார்த்து அச்சிட்டு பதிப்பிக்க நான் கேட்டுக்கொண்டபடி வெகுசிரமத்துடன் அவ்வாறுசெய்து வெளியேற்றின என் உறவினர் மகா-ா-ா-ஸ்ரீ K. கைலாஸம் அய்யருக்கு நான் கடமைபட்டிருக்கிறேன்.

அரங்கம்
5—5—14 } கௌரியம்மாள்

உ



வேலுமயிலுந்துணை.

# திருச்செந்தூர்.

# வேலவன் கீர்த்தனைகள்.



## கணபதிதுதி.

சங்கரன் மூத்தோய் சரணம்
ஐங்கரம் ஏத்தோய் சரணம்
செங்கதிர் நிறத்தோய் சரணம்.
மங்கள குணத்தோய் சரணம்.

## வேலவன்துதி.

கற்தனுதலுதித்த கதிரொளியே போற்றி
கங்கைதனில் வளர்ந்த காங்கேயா போற்றி
கடம்ப மலர்மாலை யணிகந்தா போற்றி
கன்னியர்களிருவருடன் களிப்போய் போற்றி

## ஸரஸ்வதிதுதி.

வெண்டாமறை மலர் வீத்திருக்கும் சேயே
வண்டாடும் பூங்குழ லேற்றிருக்கும் தாயே
கொண்டாடுவோர் நாவில் குடி கொள் நீயே
தண்டாம லீதை நிறை வேற்றுவாயே

## மஹேசுவரன்துதி.

வண்டுக்கும் பூங்குழலாம் மாதையிடம் கொண்டவனே.
விண்டுமகள் விதிமுடியை வேய் தோளில் பூண்டவனே
அண்டமெலாந் தஹிக்கயெழு மாலவிட முண்டவனே.
கண்டீ புலி பாம்புங்களிக்குஞ் சபை தாண்டவனே.



## கீர்த்தனங்கள்.

ராகம் சங்கராபரணம் ஏகதாளம்.

பல்லவி.

கந்தனே உமை மைந்தனே நான் வந்தனஞ் செய்தேன்.

அனுபல்லவி. [தில் கந்தனே.

எனை அந்த முடனே வந்து காறர விந்தபாதனே- செந்

சரணம்.

1. குமரவேஷனே அமரபோஷனே குஹகுமரவேஷனே
[அமரபோஷனே
அஸுர ஸுரத்வேஷனே இரண்ய சேஷனே—செந்
[தில் கந்தனே

2. ஸ்வாமி நாதனே சதுர் வேதனே சிவஸ்வாமிநாதனே
மிககாமி நானுகிலுங்காருங்கார்த்தி கேயனே- செந்தில்
[கந்தனே

இராகம் - நவரோஸ் - ஆதி தாளம்.

பல்லவி.

வா வடி வேலா வந்து மயூரமீது தா
வடிவேலா உன்தன்பத சேர்வையை- வா வடிவேலா.

சரணம்.

1. ஓடி இவ்வுலகெங்கும் தேடி நின்னுமத்தை.
பாடி அலைந்து வந்தேன்மோடி செய்யாமல் நீ—வாவடி.

2. ஆறுமுகனே பன்னிருகரனே யென்குரு
பரனே யேழைக்கருள் தரவே ஓடி- வாவடிவேலா.

இ ரா க ம்- ப்யா க டே- ரூ ப க சா ப் பு தா ள ம்.

பல்லவி.

பிணிதீர்த்திடுவோனே பேதை நான்படும் பிணிதீர்த்
[திடுவோனே

அநுபல்லவி.

அணிகளிலங்கும் சுப்பரமணியனே துணிவாய் நான்
பணிந்திட அருள்திரு தணிகையிலுரைவோனே-பிணி

சரணம்.

மாதவஞ் செய்ததினல் மண்மிசைமீது மானிடனய்
பிறந்துன்
பாதகமலந் தன்னிலே பக்தியுடன் நான்நிதமும் பணி
[யாமல்
வாதனை மிகுந்த உன்வழிபாடு செய்யாவென்
வேதனை விலக்கிடும் மாதவன் மருகாவென்- பிணிதீர்த்
[திடுவோனே

இ ரா க ம்- தோ டி- ரூ ப க தா ள ம்.

பல்லவி.

வாசலிது வாசலிது மால்மருகன் வாசலிது
தேசம் புகழ் செந்தில் முருகேசனிட வாசலிது

சரணம்.

1. வாசவனும் கேசவனும் வந்திறங்கும் வாசலிது.
நேசமுடன் பூஜை செய்வோர் பாசமறும் வாசலிதுவா.

2. அமரவருணன் அலேயாய் யடிபணியும் வாசவிது.
குமர குருபரனெனப்பேர் கொண்டமூர்த்தோன் வாச
[விது.



## இராகம் சங்கராபரணம் ஆஸ்ரஜாதிதாளம்.



கண்ணிகள்.

1. வடிவேல்தனை மறைத்து வணிகனுருதரித்து
வாடிவனம் எங்கும் தேடி அய்யன்
நாடியே வள்ளியைக் கூடிடவே வெகு
வேடிக்கை செய்திட்ட வித்தைகனை நிதம்
வேண்டினல் வினைதீர்த்திடுவான் பவம்
தாண்டிடென்றே உறைசாற்றிடுவான்

2. வீராதி வீரர்களாகிய வேடரை வென்றிட
வேங்கையாய் நின்றவனை தீரனுகிய திருமால்மருகனை
தாரகமாரக யேறகனை நிதம் மாருமல்பூஜை
செய்தால் மனமே நம்மைக்காரு திருனதுவேயினமே



## இராகம்-பியாக்தாளம்-தேசாதி.



பல்லவி.

ஐயனே நடராஜனே அருள் செய்வாய் ஜகதீசனே.

அனுபல்லவி.

வையகம் புகழும் முருகப்பனை பெற்றெடுத்த
மெய்யனே வந்து பய்ய பய்ய நடநமிடும் ஐயனே
[நடராஜனே

சரணம்.

1. அண்டம் புகழும் நீலகண்டன் செங்காடு சென்று
செங்காட்டில் சிருத்தொண்டன் பிள்ளைக்கறியுகந்து
சேயை அளித்த ஐயனே நடராஜனே

2. பாம்பு புலியாட பக்தர் நிதம் தேட
வீம்பால்கால்விண்ணாட வெட்கி காளியோட ஐயனே
[நடராஜ



இராகம் எதுகுலகாம்போதி ஆதிதாளம்.

பல்லவி.

தீரனாகிய சூரதாரகமாரக வீரப்ர தாபப்ரபோ

அனுபல்லவி.

ஆரணநமறரும் நாறணனும் பூஜிக்கும்
காரண ஜகத்பரிபூரண வாரணரூப- தீரனாகிய

சரணம்.

பெண்ணின் வாதினால் காலை விண்ணில் யெடுத்தோன்
[நெற்றிக்
கண்ணினுதித்த கதிர் வண்ணனாகிய உன்னை
எண்ணி எண்ணியே மனம் புண்ணாகி நேனையிரூர்க்
கண்ணால் பாரும் கமலக் கண்ண நயன் பூஜிக்கும்- தீர
[னாகிய

முடுகு.

கர்த்தனே உமையவள் புத்ரனே அஸுரர்க்கு அஸ்த
[ரனே
அமரர்க்கு மித்ரனே அடியேன் செய்

குற்றமனைத்தும் பொறுத்திடுவாய் சுத்தபித்தனுதனு
[தித்த

சித்தனே யென் முன்னே வேத்திமயிலேறியே
சத்திவேல் பிடித்திடும் நித்யனை பக்தியுடன்
ஸ்துத்யங்கள் செய்திடுவாய்- தீரனாகிய

இராகம்-உசேனி-தாளம்சாப்பு.

பல்லவி.

மன்னவா மயிலேறி மங்கையருடன் யென்முன்வா
[மயிலைமன்னவா

அனுபல்லவி.

வன்னினுதனுதித்த பன்னிருகரனே மலைமன்னவா

சரணம்.

1. பன்னகசயனனும் அன்னவாகநயனும்
உன்னதமாய் பூஜித்து செங்நிவணங்கும் மலைமன்னவா
2. தேவர் துபரம் தீர்த்து திருமால்தனையும் ஏர்த்து
செந்தில் நகர்தனிலே சிறமம் தீரவே சிறந்த மலைமன்
[னவா



இராகம்-இந்துஸ்தானிகாபிதாளம்ரூபகம்.



பல்லவி.

வடிவேலனே செந்தில் வடிவேலனே

அனுபல்லவி.

துடி இடைகன்னிமருங்கில்வாழும் ஸோமசுப்ரமண்
யனே சக்தி- வடிவேலனே

சரணம்.

1. அடியார் துயரை தீர்த்தது போல் கொடியென்தனை
[குறித்து நோக்கி
படியும் வினையை தீர்த்திடும் கோழிக் கொடியுடைய கும
[ரனே சக்தி- வடிவேல

2. வஞ்சி மோகம் கொண்டு சென்ற வாரணக்கொடியா
[உன்னை
தஞ்சமென்றேன் தாபம் தீரும் தணிகை வளர்ஷண
[முககுஹ- வடிவேலனே



இராகம் சங்கருபரணம் தாளம் ஆதி.



கண்ணிகள்.

1. ஓரூர் முகமும் யிரூர்கரமும் மூவார் நயனமும் கொண்
[டமுதல்வனே
சீர்மிகும் சூர்வேல் செங்கையிலேந்திய சிவசுப்ரமணி
[யனே

2. அந்தமிகும் திருசெந்தூர் அமர்ந்திடும் சுந்தரபாதா
[விந்தனே
உந்தனை வந்தனை செய்து மகிழ்ந்து புகழ்ந்திடா மைந்
[தனை காத்திடாய்



இராகம்- உசேனி- தாளம் ரூபகம்.



பல்லவி.

மயில்வாஹனே பச்சைமலைவாஹனனே ஒயிலாள்
வள்ளி மோகனே- பக்தமயில்

அநுபல்லவி.

எழில்மூன்றையும் இளநகையால் யெறித்த யீசனுத
[லுதித்த
குயில் கூவிடும் குன்றமர்ந்தகுஹனே அருமுகனே
[பச்சை- மயில் வாஹனே

சரணம்.

சக்தி வேல் கைகொண்டு நிற்கும் ஷண்முகநாதா உன்னை
நித்யமும் துத்யம் செய்யும் பக்தர்கள் போதா
குற்றம் செய்யும் குழவியிடம் குமரனே செய்வது வாதா
சுத்தபற வெளியே என்னை உத்தமைப்பாய் ஒளியே ஓர்
ஆருமுகத்துடன் வருக அன்புடன் காக்ஷிகள் தருக
அடியேனகமும் உருக அருளானந்தம் பெருக மா-மயில்
[வாஹனே

## இராகம்- அடாணா- ஆதிதாளம்.

பல்லவி.

அய்யனே முருகையனே வந்தருள் செய்
யெந்தன் வெய்யவினைதனை நய்யவே செய்திட அய்யனே

அநுபல்லவி.

வையம் புகழ்ந்திடும் வஞ்சிமணாளனே மெய்யென்றோர்
[உள்ளம்
விளங்கும் கிருபாளனே அய்யனே

சரணம்.

1. எத்தினை சொன்னாலும் சித்தமிரங்காத குற்றம் நான்
[செய்தேனோ சுத்த
பித்தன் சேயனென பெரியோர் புகல்வது பெம்மானே
[மெய்தானோ

மெத்த பத்தினியாகிய பாவயரை மிகபாருமல்லை
[தேனே
முற்றும் பரதவிப் போர்க்கருள் செய்குவா னென்பது
[பாரினில் பொய்தானே
இருகாதம் மணக்கும் கடம்பமலருடன் வேதன் பணி
[ந்திடும் வித்தகனே என்முன்
வாதுகள் செய்யாமல் பாதென்னை கார்த்திடும் மாதவன்
[போற்றிடும்
மாமயில் வீரனே- அய்யனே

2. குஞ்சரி வஞ்சியுடன் விளையாடிட குன்றினில் சென்
[றோனே சற்றும்
அஞ்சாமல் வந்த அரனுரஸ்திரத்தின்முன் ஆண்டியாய்
[வென்றோனே உன்னை
தஞ்சம் என்றோர்க்கருள் செய்திட வேண்டியே
தணிகையில் நின்றோனே இந்த
பிரபஞ்சத்தில் லீலைகள் செய்துடன் நால்வர்க்கு
பிரணவம்புரிந்தோனே

முடுகு.

கடல் நஞ்சை உண்டோனருளால் வந்த பாலனே கஞ்ச
[மலரை
நிகர் தரும் காலனே செஞ்சொல்புலவர்க்கருள் செய்யும்
சீலனே யென் சொல் இனி தென யேர் வடிவேலனே
[அய்யனே.



## இராகம் - நாதநாமகிரியை - தாளம்சாப்பு.

தெரிசிக்க வேணும். செந்தில் வேலனை தெரிசிக்க
[வேணும்

அனுபல்லவி.

தெரிசித்த பொழுதங்கு பரிசுத்த மாகிடும் அரிமர்த்
[தன பாண்டியன் முன்
னறிவித்தோன் பாலனை தெரிசிக்க வேணும்.

சரணம்.

1. வார் குழலுன்மையீந்த வஜ்ரவேல் வலக்கறம்
கூறுக க்ரவுஞ்சனை குறியிட்ட இடக்கறம்
கார் நிறத்தாரன்க்காகத்தி கொள் வலக்கறம்
சீர் பெற்ற சிங்கனை சிதைத்ததும் இடக்கறம்
பார் வில்லோர் கறமாம் பாணஜாலங்கள்
தூர்வதோர் கறமாம் பர்வதங்களை
வேற்களுடன் யெடுத்து விசும்பிடும் வலக்கறம்
நேர்வந்த பத்மனை நெறித்தது மிடக்கறம்
பேர் பெற்ற சூரனை பிழிந்துமல்ல யுத்தத்தில்
ஆர் பரித்து குத்தி அறைந்ததும் வலக்கறம்
தேர் யேரிதிரன் சிவனஸ்திர வீர் கொண்ட மாறன்
[வரவைக் கண்டு
நீறணிந்து தண்டாயுதம் கொள்ளும் வலக்கறம்
ஓர் குத்தினல் வயிசி உறம் கொண்ட திடக்கறம்
மார் வேட சூறருக்கு மகுடம் தரும் வலக்கறம்
எர் பீரார் கரத்தால் பீசனை பூஜித்தோன் பாதம்—தரி
[சிக்க வேணும்



## ராகம்-சங்கருபரணம்-இங்லீஷ்நோட்மெட்.

கண்ணிகள்.

1. செந்தில் வாழ் சிவசுப்ரமண்யனே- திருசெந்தில்
[வாழ் சிவ சுப்ரமண்யனே
தேவர் போற்றும் திருக்கண் சாத்தும் திவ்ய சரண்ய
[கெண்யனே
திருமாலும் அயனும் தேடி பூஜிக்கும் செம் பொற்பா
[தனே
தேவி உடனே வாரும் ஸ்வாமி நாதனே-இரு தேவியு
[டனே வாரும் ஸ்வாமி நாதனே

2. கந்தனே உனை யெந்த நேரமும் செந்தில் கந்தனே
[உனைநான் யெந்த நேரமும்
வந்து போற்ற மலர்கள் சாற்ற வரம்தா சொந்த அந்
[தனே
அரவிந்தபதனே இந்து வதனே குந்த தந்தனே மந்த
காஸமாகவா, உமை மைந்தனே யுன் முன் மந்தகாஸ
மாகவா உமை மைந்தனே

## இராகம்-கேதாரம்-ஆதிதாளம்.

பல்லவி.

கந்தனே இது என் தந்தமோ இருவர் சொந்தமோ உன்
செவி மூந்தமோ அறியேன்—கந்தனே

சரணம்.

1. பந்தமான ஸம்ஸார தொந்தமாய் வெந்து தவிக்கின்
றேன் ஸொந்த முடனுளும்
பாசவினைதனை நாசம் செய்திட
நேசமுடன் வாரும் வாஸவன் வணங்கும். -கந்தனே



இராகம்-மோஹனம்-தாளம் ஆதி.



பல்லவி.

சரவணபவகுக ஷண்முகனேவா

அனுபல்லவி.

குறமறபின் மானையும், குஞ்சரியாளையும்
கூடிடும் வீரனே குன்றெறிதீரனே சரவண

சரணம்.

1. ஆசையாகிய வேசயை மரித்து, ஆதரித்திடும், ஆரு
[முகவா உன்னை
பூஜை செய்வோர் மனத்தூசை விலக்கிமணி
ஓசையாய் ஒலித்திடும் தேசனே பிரகாசனே—சரவண

2. அய்யனே, பன்னிருகைய்யனே, முருகையனே ஆண்
[டிப்பய்யனே, அதிதுய்யனே,
அடியார் மெய்யனே, னன்கு, செய்யனே, நல், முத்
[தய்யனே உய்யெனை—சரவண



## இராகம்-இங்லீஷ்-நோட்மேட்.

பல்லவி.

கந்தன் பதம் தனை ஸந்ததம் சிந்தையில் வந்தனம்
[செய்மனமே—செந்தில்

அநுபல்லவி.

இந்திரன் வந்து வணங்கும் சுந்தர குருபரனே பராத்பு
[ரனே—கந்தன்

சரணம்.

1. குலிசாயுதமும் கூர் வேலாயுதமும் கொண்ட குரு
[பரனே

என்னை வலிய வந்தாட் கொள்ளும் வள்ளிமணோ
[கரனே குகனே யோகனே—கந்தன்

## இராகம் முகாரி தாளம் ஆதி.

பல்லவி

ஸ்வாமி நாதனே உன்னை ச்சரண மடைந்தேன்,
[காரென்னை

அநுபல்லவி.

பூமி தனில் பிறந்துன் பேறருளைக் காணாத
காமினானாலும் காரும் கந்தா வேறில்லை கதி—ஸ்வாமி

சரணம்.

1. ஆறுதார மென்றுந்தன் சீரான சேவடியில் மாறுத
[அன்பு வைத்து
நேராப் பதம் பூஜிக்கு தோருதவன் பிணிக்கி தூரா
[யிருக்கு மென்தன்
தீரா தீவினை தீர்த்து ச்சோராய் திருவடியில்—ஸ்வாமி
2. தாவிப் பணியும் நிதி சார்பிலிருந்தாலும் நான் கூவி
[துதிப்பதுந்தன்
குழைச் செவி பெற்று என்னை மேவிபே அழைக்தி
[டும் கோவிந்தன் மருகனே
பூவி புகழும் கந்த ஸ்வாமி ஆவினங் குடி— ஸ்வாமி

இராகம்-ஸெளராஷ்டரம்-தாளம் ஆதி.

பல்லவி.

பொர்ப்பதம் தன்னை பூஜிக்தாரே மிக அர்ப்புதமாகிய
அரவிந்த அலர் தொண்டு பொர்ப்பதம்

அனுபல்லவி

தர்ப்பரன் சேயனே சிர்ப்பராமாயனே
நர்ப்பர சேயனே கர்ப்பக மலருடன் —பொர்ப்பதம்

சரணம்.

1. பத்ம மலரினுன்னைக் கண்டு பங்கஜன் மாலும்
பரமானந்த மாமழுவண்டு பதம் பணிந்து

படும் துபரம் தனையும் விண்டு பக்தர்களெல்லாம்
பரிந்து பக்கம் தனிலே நின்று பயன் பெறவே

முடுகு.

பன்னீர் மலர் பாரி ஜாதம் பச்சைபாடலி புஷ்பங்களெ
டுக்க

பத்தரைமாத்து

பசும்பொன்னிழை தனிலேபரிமளமலர்களைத்தொடுக்க

பன்னிருகையன்

ப்ரணவத்தை புரிந்தவுடன் பஞ்சமஹாபாதகத்தை
விடுக்க

பணிவோர்க்கெல்லாம்.

பரிந்து இலை விபூதி பாலனணி கெந்தங்களை கொடுக்க

பத்மசூரனை

படுகளத்தினில் வென்ற பரனை பார்க்கமனதை முடுக்க

பத்தினிமார்கள்

பத்மமலர் தட்டிலே பச்சை கர்பூர ஆலங்களை யெடுக்க

பரைசுதன்மேல்

பாசம் மிகவும் வந்து பாலனையே புகழ்ந்து
பாடியாடி மகிழ்ந்து பாதிரிவில்வம், கலந்து- பொர்ப
[தம்

2. அன்னை கிரிஜை மகிழ் லீலர் அகமகிழ்ந்து
அளித்த சத்யாயுதத்தால் வேலா அனங்கன் மீது
அக்கினி விழித்தாக் கிட்டோன் பாலா அனுதினமும்
அண்டினோர்க் கருளதி சீலா அக்ஷரமாலா

முடுகு.

அன்பர்களை காத்திடவே ஆறுமுகமான அவதாரு
அ ரி அ ய ன் க் க ா
அதிகொடிக்ரவுஞ்சனை அறுமிரண்டாகச் செய்தாய்
[நேரு
அ ற ன ரு ள ா ல்
அஸுரசூரபத்மனை அஸ்திரங்களாலே வென்ற தீரு
அ ம ற ரு ட ன்
அந்தணர்களாசி கூற அற்புதமயில் மேல் வரும் வீரா
அ லை அ ரு கி ல்
அம்பிகையுடன் யீசனை அர்ச்சனைகள் செய் செல்வக்கு
[மாரு
ஐ ர ா வ த ம் மே ல்
அருணகாந்தி வகித்து அண்டர் ஸேனபத்யம் செய்
[ஓங் காரு
அ நே க ங் க ண் ண ன்
அருமைச் செய் குஞ்சரியை அப்போ விவாகம் செய்ய
[லங்காரு
அ ம் ம ா ன் சே ய ா ள் க் க ா
அடவிதனில் நடந்து அவளுடன் வாது செய்த சோரு
அ ழ கை க் க ண் டு

ஆவல்மிக பாருட்டி ஆரண்யத்தில் சீருட்டி
ஆனந்த அமு தூட்டி ஆலிங்கித்தகுகந்தன்
[-பொர்ப்பதம்



## இராகம் - பியாக் - ஆதிதாளம்.

பல்லவி.

வேலனைப் பணிவோம் வாடி விரைவுடனே பாலனை
யளித்திடும் பரம குருவாம் வடி. வேலனை

சரணம்.

1. தைப்பல் மருங்கில் நிர்க்கும் ஷண்முகநாயனை
தாமதமேனின்னம் மாமயிலேறியே
வரு வாரோ பதம் தருவாரோ அருள் புரிவாரோ ஆ
ஆருமுகமாயமர்ந்த வேலனை

2 அயனும் மாலிந்திரனும் அகமகிழ்ந்து அர்ச்சிக்கும்
அரவிந்த பதத்தை யென் அறிவுகண்ணா லெதிர்த்து
பாரேனோ பதம் சேரேனோ துயர் தீரேனோ பா
ஆலகுருவாம்வடி வேலனை



## இராகம் - செஞ்சுருட்டி - ஆதிதாளம்.



பல்லவி.

செந்தில் நகர் வாழும் செல்வனை தெரிசிக்க ஸொந்த
முடன்வாரீர்தோகையர்கள் யெல்லவரும் செந்தில்
மாநகரே திருசெந்தில் மாநகரே

அனுபல்லவி.

நந்தவனத்தில் நாடி மந்தார மலர் தேடி
குந்த தெந்தன் புகழ் பாடி யெந்த விதமும் ஓடி - செந்
[தில்

சரணம்.

1. அந்த முள்ள கோபுரமும் கெந்த மலையும் யெதி
ரில் விந்தை யுள்ளபால் கடலும் ஸுந்தரமாம்
மண்டபமும் பந்தவினை போக்கும் ஸோமாஸ் கந்
தனுட ஸன்னதியும் நந்தமுகுந்தன் ஞகசயன திருப்
பதியும் செந்தில்

2. நவர்லக்ஷர் அந்தணரும் நால்வேதங்கள் முழங்க
நலமுடயகந்த புஷ்ப்பம் பிலை விபூதி வழங்க
நாத நிட முகஒளியால் றவியும் கிழக்கில் மழுங்க
நாறணன் தன் மகளிருவர் நாவாறப் புகழுங்க- செந்தில்



## இராகம்-ஆனந்த பைரவி-ஆதிதாளம்.



பல்லவி.

கந்தன்க்கும் எந்தன்க்கும் கடுவழக்கிருக்குது
காண் போறறி யாவழக்கு காரிழையே

அனுபல்லவி.

மந்தன் போலேவள்ளியை மருவகானல் சென்றர
விந்தபாதம் சிவக்க வேடிக்கை செய்த மாய கந்தன்

சரணம்.

கனவு தனிலே வந்து காத்தா லென் சிறந் தொட்டான்
நினைவோ வென்றெழுமுன்னே னெத்தியில் நீரிட்டான்
மனதை மயக்கி யென்னை மௌனிபோலாக்கி விட்டான்
மாலின் மருமகன் மாயமாய் மறைந்து விட்டான்- கந்
[தன்



## இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.



பல்லவி.

வேலனே குணசீலனே உமை பாலனே
யெனை வந்துகார் வடி — வேலனே

அனுபல்லவி.

மாலின் மருகனுன கோலனே வள்ளி குஞ்சரி
மதனலீலனே — வேலனே

சரணம்

1. காளியுடனே வாது செய்திட்ட
கர்த்தனுடைய கனிஷ்ட புத்ரனே
நாளிலும் மூப்படையா ஸனகர் நால்வருக்கும்
மெய்யுணர்க்கும் மித்ரனே- — வேலனே

2. கம்ஸனை வதம் செய்த கமல
கண்ணன் மருகனுனகந்தனே
கானகத்தினில். வள்ளிக்காக உடுகி
நடந்த பதம்தா ஸொாந்தனே — வேலனே



## இராகம்-பைரவி-ஆதிதாளம்.



பல்லவி.

செந்தில்நகரில் வாஸஞ்செய்ய வென்றால்
பெவர்க்கும் ஜென்மம் ஜெனித்தல் வருமோ

அனுபல்லவி.

கந்த புஷ்கரணியைக் காண்பதுவே பாக்கியம் கடலில்
நிதமும் ஸ்நானம் செய்வதுவே ஆரோச்யம்—செந்தில்

சரணம்

1. கருது வோர்ப்பிணியெல்லாம் கரைக்கும் கருணைக்கடல்
கந்தன் பிஜாக்ஷரத்தை உறைக்கும் ஓங்கியகடல்
கெங்கை உதித்தோன்பத க்கமலம் பணியுங்கடல்
கரியமால் சேஷன்மேல் கண்வளரும் திருப்பாற்கடல்
[செந்தில்

2. தேவேந்திரன் மலரால் தினம்வந்து பூஜிக்கும்
தேவகன்னியர்நட மாடியே யாசிக்கும்
வோரம் திருவிசைபாசந்தம் கோஷிக்கும்
தேன் பொழியும் பாமலே சிருவர்கள் பாஷிக்கும்
[செந்தில்



இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்சாப்பு.



பல்லவி

யெப்போயென் துயர் தீர்க்கவருவா யென் றறிகிலேன்
யேழைமேல் இந்த வாதுயேதோ

அனுபல்லவி

ஒப்பிலா மயிலேரி செப்பரிய செந்திநில்யிப்பு வனத்
தோர் போற்ற அப்பனுட மர்ந்தோய்- யெப்போ

சரணம்

1. குலிசாயுதம் விளங்கும் குமரகுகனேமணக்
கோலத்துடனே யென்முன் வாராய்
மலினமடைந்த யென்மேல் வாதுகள் செய்யாமல்
வலியவந்தாட் கொள்வாய் வாமனன் மருகனே
[யெப்போ

2. பஞ்சவர்ணக் கிள்ளைபோல் இன்சொல்லுடைய குற
வஞ்சி மயலினுலே கஞ்சமலர்த்தாள் நோக
கொஞ்ச நடையிலங்க செஞ்சடையும் குலுங்க
வஞ்சவா தலணைந்த பஞ்சாக்ஷரப்பொருளே- யெப்போ



## இராகம் - ஆகிரி - ஆதிதாளம்.



பல்லவி

சரணம் சரவண பவகுஹ சண்முக
சங்கரன் குருபரனே

அனுபல்லவி

வரணும் வள்ளியுடனே தாணும் தாமரைப்பதம்
அரனுமம்பிகையும்ஐங்கரனும்மகிழ்வுருவோய்- சரணம்

சரணம்

1. ஆணவச்சூர அறனுரஸத்திரத்தின்முன்
ஆண்டியாய் நின்று வென்றோனே
யாழ் பாணத்திலே பலபக்தர்கள் போற்றிட
பாவையுடனே சென்றோனே
ஷட் கோணத்திலே ஷடஅக்ஷரமத்தியில்
தன் மயமாகி நின்றோனே
நான் காணவும் கண்கள்களிக்கவும்
மாதுலன்கன்னியுடனே நின்றோனே
பதம் பேணவரம்பைன்றோனே வட
சோணகிரி வாழ்நன்றோனே- சரணம்

2 அஸுரரைவென்றிட்டு அமரர்கள் சூழவே
அறன் பூஜைசெய்திட்டகைய்யா
திருதென்பறங் குன்றத்தில் தேவகுஞ்சரியாளை
திருமணம் செய்திட்ட பய்யா
உந்தன் பின்பற்றியே நவலக்ஷர்கள்
போற்றிடபிரியாவரம் தந்த அய்யா
மாமன் பொன்மானை கூடிபு தல்வியை யீன்றிட்ட
புலன்களறிந்திட்ட மெய்யா
உடன் தன்பதி விட்டேகி துய்யா
மாதுக்கின்பம் தந்த முருகையா- சரணம்



இராகம்- சங்கருபரணம்- இங்லீஷ் நோட்தாளம் சாப்பு



பல்லவி

வேலவன் பாதத்தை விடமாட்டேன்
வேறொரு தெய்வத்தை தொடமாட்டேன்
வினையில்கிடந்து கெடமாட்டேன்
வேகதுன்பம் படமாட்டேன் சக்தி வேலவன்

சரணம்

பக்தர்கள் பூஜிக்கும் பாதனடி
பாலஸனகருக்கு போதனடி
பரமன்தனக்கும் நாதனடி
பார்வதிமகிழும் விநோதனடி வடி வேலவன்

கடலில் களிக்கும் கந்தனடி
கன்னியிருவருக்கு சொந்தனடி
கமல பதார விந்தனடி
கங்கையிலுதித்திட்ட அந்தனடி கூர் வேலவன்



## இராகம்-பியாகடே-ஆதிதாளம்.



பல்லவி

சரவண பவனே ஷண்முகனே சிவசங்கரன் குருபரனே
சரணம் மடைய தருணமிதுவே கருணைபுரி வாய்காங்
[கயனே

1. வந்திடாய் நிதம் நீ தந்திடாய் பதம்
தாருகனை அதம்செய்ய அவன் சதமென பணிந்திட
மனம் குளிர்ந்திட
யேற்ற யீரூர்கரனே நீ வந்திடாய் நிதம்

2. நான்முகனுக் குபதேசித்த நாதனே
நண்பனும் ஸனகாதி போதனே
நாதனே மலர்பாதனே மாதர் காதனே குஹனே
நீ வந்திடாய்



## இராகம்-ஆரபி-ஆதிதாளம்



பல்லவி

கந்தன் பதந்தனை ஸந்ததம் சிந்தையில நினைமனமே
வெகு அந்தமுடைய அரவிந்தபதம் அளிக்கும் தந்தி
முகன் ஸோதர சுந்தர சுகந்த- கந்தன்

சரணம்

1. நந்திவாஹனனுமைசிந்தை மகிழ்ந்துகூட
சுந்திரமாங் கனிக்கா முந்திநின்று வாதாட
உந்தி மயிலேறி உலகு மூவேழுமோட
தொந்திதந்தையை பணிந்துடன் நின்று ஆனந்தம்நாட
கந்தன் கடும் கோபமாய் கா்த். நிறத்தானைச்சாட
கங்கையணிந்தேன் ஞானக்கனி நீ யென்று கொண்
[டாடும் கந்தன்

2. கண்டம் தனிலே ஆலம் நின்றோ னுதலுதித்து
மண்டலம் விண்டலம் மற்றுமெங்கும் ஜொலித்து
முண்ட மலரதனில் முருகனை யுர்பவித்து
நின்ற கார்த்தியர் அமுதுண் டுடல் பூரித்து
கொண்ட அருமுகமாய் தொண்டர்க் கபயம்தந்து
சண்ட அனல்கனை முன் தெண்டபாணியாய் நின்ற
[கந்தன்



இராகம்- அடாணா- ஆதிதாளம்



பல்லவி

சரவண பவ குகனே சிவசண்முக சங்கரன் குருபரனே

அநுபல்லவி

காகமுனி வனுக்கும் சுருதும் ஸனகருக்கும்
ப்ரணவம் உரைக்கும் பாலா பக்தர்கள் போற்றும்வேலா
[சரவண

சரணம்

1. மரகத மயில்வாகனே. வள்ளிக்குஞ் சரி
மகிழும் மதனமோகனே
திருமுாகரி போற்றும் போகனே. மூவுல்
கோரும் முறை முறை யேற்ற நேகனே

முடுகு

மண்ணும் விண்ணும் புகழ் மானகர் மேவிய
மாங்குயில் மயில்கள் மகிழ்ந் துமே கூவிய
மாமலேகள் மதிள் மேலே யளாவிய
மாருதத்தால் அலேவந்தன மாகிய சரவண

2. செந்தில் வளர்ந்தகந்தனே சிவசங்கரி
சிந்தைமகிழ்ந்த மைந்தனே
வீரதந்தி முகனுக்கு பிந்தனே.
தானவர் போற்றும் சுந்தரபாதார விந்தனே

முடுகு

வந்தனம் செய்திடும் வாசவனொரு புறம்
அந்தணரருமறை ஆசிகளொரு புரம்
கந்த புஷ்கரணி காவடிகளு மொருபுரம்
மந்த காசமாய் மாமன் மங்கை மாரிரு புரம் சரவண



## இராகம்- பூரிகல்யாணி- ஆதிதாளம்



பல்லவி

செந்தில் நகர் வாழ்கந்தா சிவசங்கரி சிந்தைமகிழ்ந்
தெடுத்த மைந்தா திருச் செந்தில்

அநுபல்லவி

விந்தையாய் ஸனகருக்கு பதேசித்திடும்
ஸொந்தா திரு செந்தில்

சரணம்

1. கரவுஞ் சகிரி தன்னைகண்டித்தவேலா பொல்லாக்றவுஞ்ச
காமதகனம் செய்த பக்தகற்தனுடையபாலா

முடுகு

கார்த்திடாய்துயர் தன்னை · தீர்த்திடாய் கருணைகண்
பார்த்திடாய்யித்துதி யேர்த்திடாய் சிவகுரு செந்தில்

2. கஞ்சனைவதம் செய்த கமலைகண்ணன் மருகா மாம
கஞ்ச,வஞ்சியுடன் நடந்த யிளவஞ்சி வடிவேல் முருகா

முடுகு

கந்தனே உமையவள் மைந்தனே இருவர்கள் சொந்த
னேகமலபதம் கலந்திடும் எந்தனே செந்தில்



## இராகம்-காம்போதி- ஆதிதாளம்



பல்லவி

செந்தில் வேலனை தெரிசித்திடு வோம்வாடி திரு
செந்தில்

அநுபல்லவி

சேடியரே சேர்ந்தெல்லோரும் சிந்தை
மகிழ்ந்துகூடி செந்தில்

சரணம்

1. அந்தி வண்ணன் அருகனை தந்திமுகன்ஸோதரனை
இந்திரன் மருமகனை ஸுந்திரகுருபரனை

முடுகு

அந்தரங்கத்துடன்கூடி அனைவர்களும்
ஆனந்த புகழ்பாடி அப்பனுடைய அலரடிதனைத்தேடி
அருமுகனை அண்டினோரை க்கார்க்கும்குரு
தொண்டர் துதிபேர்க்கும் திருச்செந்தில்

2. கர்ப்பூரம்கெந்தம்மணக்கும் கந்தனுடைய சந்நதியில்
கடல்வந்து கவிந்திடும்காங்சயன்றன் முன்னிலையில்
பொற்படி விளங்கும் வாயில் பூரணவேதம்
சொற்படி துலங்குங்கோயில் வலமாய்வந்து
தற்பரனை போற்றும்நேயில் படும்துயரை
அற்பமாய் மதித்துநம்மை ஆளவேயமர்ந்த
[திருசெந்தில்

இராகம்- இந்துஸ்தானி- காபி- தாளம் சாப்பு

பல்லவி

வடிவேலையனே வாரும்நான் வரம்வினவுதல் தாரும்.

சரணம்

1. அடியார் துயரம் தீர்க்க அறுமுகமாயமர்ந்து நெடிய
வேல் பிடித்திட்டநீதனே போதனே வடிவேலையனே

2 காடுதனிலே சென்று வேடுவர்களை வென்று கண்ணன்
மகளையுன்றுகலந்து செந்தினில் வந்தவடிவேலையனே

## இராகம்- காம்போதி ஆதிதாளம்



பல்லவி

சரவண பவனெனும் குகனே அடியவர் சஞ்சலம்
[தீரென்னகனே

அநுபல்லவி

பரவெளியே யேழை படும்துயரறியாயே சரவண

சரணம்

1. அரியமறைநாதனே அம்புஜபாதனே பிரியபாய்
கரகனுக்கு பேரார்ந்த போதனே சிறியாள் செய்துதி
தன்னை செவியில் மாறுமல்கொண்டு பரிவாயென்
முன்னே வந்துன் பததெரிசனம் தாராய் சரவண

2. குஞ்சரிவள்ளி மத்தியில் கோலமயில் மேல்துலங்கும்
குமர குருபரனுப் கோடிசூரியன்போல் துலங்கும்
குன்றையிரண்டாகச் செய்த குலிசாயுதம் மிலங்கும்
குகனே சண்முகனே வித்தகனே உமைமகனே சரவண



## இருகம்- கமாசு- ஆதிதாளம்

பல்லவி

போற்றிசெய்வோம் வாடி புகழ்வடிவேலவனை ன்றும்

அனுபல்லவி

ஆற்றியறவிந்தமும் சாற்றி சதாகாலமும் நாம்- போற்றி

சரணம்

1. பொன்மயிின் மீதேறும் பூரணவேலனைபக்த பொன்
மின்கொடி மெல்லியரை மேவிவிளங்கும் லீலனை
[போற்றி

2. அன்பர்களைக் காக்கும் அதிகுணசீலனை தன்னன்பர்
இன்பமாய் என்துதியை பேர்க்கும் கிரிஜை பாலனை
[போற்றி



இருகம் - கமாஸ் - ஆதிதாளம்



பல்லவி

வேலவன் பாதத்தை தியானம் செய்திடுமனமே இந்த
வேளையில் வினைதீர்க்க விமலன் துதியினமே வேலன்

அனுபல்லவி

பாலனுருவாகியே பங்கஜ மலர்தன்னில்
சீலமுடனமர்ந்து திருவிளையாடல் செய்யும் வேலன்

சரணம்

1. அன்பரைக் காத்திட ஆண்டியுருவெடுத்த நாதன்
வேதன் அருமையாய் நால்வர்க்கு அருளாநந்தம்
அளித்தபோதன் அயன்மாலிந்திரனும் அகமகிழ்ந்தர்ச்
சிக்கும் அரனார்திருமகனும் அருமுகனும் வடி வேலன்



## இருகம்-கானடா-தாளம் சாப்பு



பல்லவி

குக்குடத்துவஜனே குமார ஷண்முகனே    குக்குட

அனுபல்லவி

சிக்கில் நகர்மேவிய சிங்காரகுகனே    குக்குட

சரணம்

1. பாப்பு புலிக்கு பரதநடனஞ்செய் பாம்பு
   பிரமன் திருமகனே பாலகுருபரனே    குக்குட
2. அத்திமுகன் சோதர சக்திவேல் கொண்டகர
   சத்துருவாகிய தாரகமாரக    குக்குட



## இருகம்பியாக் ஆதிதாளம்



பல்லவி

செந்திலவேலவன் பதம்துணையே திருசெந்தில் அந்தி
வண்ணன் சுந்தரிக்கும் அறுகிணையே அமரர்சிறை
மீட்டதும் அன்னைகணையே திரு    செந்தில்

சரணம்

1. தேவர் போற்றிடும் செந்திற்பதியே
   திருமாலுடனே கூடவந்த நிதனே
   திருப்புகழே யவர்க்கு திவ்யதுதியே திரு    செந்தில்
2. நால்வர்க் குபதேசித்த நாதனே நாவலர்
   போற்றிடும் நால்வேதனே
   நாயகியிருவர்க்கும் நல்விநோதனே திரு    செந்தில்



## இருகம்-பியாகடே-ஆதிதாளம்

பல்லவி

எந்தன் மீதினில் இந்தவர்மமா கந்தனே உனக்கிது
[தர்மமா

சரணம்

I. அயன்மாலர்ச்சிக்கும் அரவிந்தபாதா
அடியேனிடத்தில் அதிகமும் வாதா எந்தன்

2. கரகமுனிக்கு பரணவமுறைத்த
கார்த்திகேயனே என் ஆர்த்தி தீர்த்திடாமல் எந்தன்



## இராகம்- மத்யமாவதி ஆதிதாளம்



பல்லவி

வேலனே வந்துகா ரனே உமைபாலனே- வடிவேலனே

அனுபல்லவி

வேலனே உமயவள் பாலனே யெனக்கருள் சீலனே
வள்ளிகுஞ்சரிலோலனே யேரகவடி வேலனே

சரணம்

1. அன்பரைக்கார்க்கும் ஆண்டிப்பய்யா அடியேன் தன்னை
ஆதரித்தாள்வாய் முருகைய்யா அரியயனுக்கும்
அந்தர்ங்கமுடைய மெய்யா அரிவயர்கள்
ஆவலகற்றும் அதிதுய்யா

முடுகு

அன்பனே ஆயிரம் மாத்துள்ள செம்பொன்னே
அகமுருகி பசிப்போரனைவர்க்கு மின்பனே வேலனே
2. என்மொழி கேழ்க்க மந்தக்காதோ எளியேன் தன்னை
யேன் பென்று கேட்டிடலாகாதோ இருபுரமும்
இலங்கும் மாதர்களுட வாதோயேரகனே
உன் இதயத்திலுள்ளதிந்தச் சூதோ

முடுகு

எத்தனை குற்றங்கள் பித்தனேன் செய்யினும்
சித்தமிறங்கிக்காரும் நித்தியாநந்தனே வேலனே



இராகம் - தேவகாந்தாரி - ஆதிதாளம்



பல்லவி

இன்னமிறக்கம் வாராததேதோ கூர்வடிவேலா
இதுன் நியாயமல்ல உமைபாலா

அனுபல்லவி

பொன்னின் மலைக்குகனே வன்னமயில் வாகனேசின்
னம் சிரியேனனுதினம் வருந்தலறிந்தும் இன்னம்

சரணம்

1. கிரிஜைமகிழ விந்தை விளையாடல் செய்வதாலோ
வரிசையாய்பிரமனுடன் வாதாடுவதாலோ
உரிய நவர்லக்ஷரோடோடி இளைத்ததாலோ
பரிவாய்மேஷமேலேறிபவனிவருவதாலோ இன்னம்

2. அதிகொடிகரவுஞ்சனை அடித்ததினுலிலைப்போ
ஆனைமுகனையும் சிம்பனையும் வென்றகளைப்போ
ஆயிரம் சிற சூரபத்மனை அடிச்சளைப்போ
அமரர்துதியாலிறண்டரு செவியும்துளைப்போ
[இன்னம்

3. இசையும் தேவசேனைக்கு இறைவனுனதினுலோ
அசையும்நிதி அலைகண்டானந்தத்தினுலோ
திசைதிரும்பவொட்டாமல் தேவிமார்வாதிப்பதாலோ
தசையெனும் பணிதந்தை தாழ்வை நினைத்ததாலோ
[இன்னம்



இருகம்-காம்போதி-தாளம்சாப்பு



பல்லவி

வடிவேலவன் பதம்பணிவோம் செந்தில்- வடிவே

அனுபல்லவி

கொடியாள் குறத்தியை கூடும் தந்தரனே வொர்ன
அடியார் துயரம் தீர்க்க அமர்ந்த சுந்தரனும் செந்தில்

சரணம்

1. அஸுரர்களை மடித்த ஆருமுகனேபரிவாய்யென்முன்
வருவாய் அருள்புரிவாய் நீயென் குருவாய் வரம்
தருவாய் செந்தில் வடிவேல

2. குஞ்சரியை மணர்ந்த குமாகுருபரனே யெனதகனே
அரன்மகனே அருமுகனேயேரகனேசெந்தில்-வடிவேல



## இருகம் பின்ணுகம் ஆதிதாளம்



பல்லவி கண்ணிகளாக

1. ஸ்வாமிநாதனேசதுர்வேதனேஸௌனகாதிபோதனே
குருநாதனே ஸேஞநாதனே இருவர்காதனே
லோகநாதனே மலர்பாதனே அஸுரசேதனே
சிவஸ்வாமி நாதனே

2. வேலா உமைதன்பாலா யெனக்கருள் சீலா அறுவையர்
மணக்கோலா அமரர்க்கனுகூலா அபன் பணியும் காலா
அலங்குருதகூஷ்ரமாலா அரன்மகிழும் லீலா
ஆலா ஆலமுண்டோன்பாலா கோலாகல நீலோத்பலப்
பிரிய ஸ்வாமிநாதனே.



## இராகம்- காம்போதி- ஆதிதாளம்



பல்லவி

செந்தில்மாநகர் வாஸா தெய்வானையுடனுல்லாஸா
செந்தில்

அநுபல்லவி

அந்திவறணன் அருகாதின அ ஆதரிப்பாய் முருகா
தின அ தந்திமுகன் ஸோதரா

முடுகு

விந்தையைச் செய்து திருசெந்தி லமர்ந்த நாதா
சிவகுரு நாதா சிருவராம் ஸனகாதி போதா
விந்தைகள் செய்து திருச்செந்தூற மர்ந்த வேலா
சிவசுப்ரமணியா பாலா சிறியேனைக்காரும் சீலா செந்தில்

சரணம்.

1. அஸுரர்களையும் வென்று அமரர்களையுமன்று
ஆதரித்து ரக்ஷித்த அருமுகனே உந்தன்
பாதத்தை பூஜிக்க உபாயத்தை யறியாமல்
பாதவிக்கின்றேன் குகனே

முடுகு

அன்று குஞ்சரியுடன் நின்று பறங்குன்றத்தில்
நன்று செயவமர்ந்த நால்வேதனருள் பெற
அஞ்சாமல்வந்து உந்தன் கஞ்சமலர் பதத்தில்
வஞ்சமறப் பணிவேன் தஞ்சமென்றோறை கார்ப்பாய்
அஞ்சலெனப் பணிந்தும் நெஞ்சமிறங்கிலேயோ
பஞ்சாக்ஷரப் பொருளே நஞ்சையுண்போன் பாலனே
செந்தில்



இராகம்-நீலாம்புரி-தாளம்.ரூபகம்



பல்லவி

கந்தனைக் காணுமல் காலங்கழித்தேனே

அனுபல்லவி.

அந்தமிகுஞ்செந்தூர்வாழ் ஸுந்திரகுருபரனும்-கந்தனை

சரணம்.

1. பத்மனம்சம்குக்குடமாய் பாலன் புகழ் கூவிடவும்
பத்மனுபனருகமர்ந்து புரமணித்திரை செய பகன்ற
[கந்தனை

2. சூரனம்சம் மயிலாக சேவற்கொடியாக தாங்கிடவும் வீரபாகுநவர், லக்ஷ வேதத்வொனியோங்கும் செந்தில் கந்தனை



## இராகம் - மாயாமாளவகெளளம் - ஆதிதாளம்.



பல்லவி

வேலா அருள்புரிவாய் நான்வேண்டும் வரந்தருவாய் வடிவேலா

சரணம்

1. எத்திசையும் புகழும் பித்தனுதலுதித்த அதி சுத்தப்பரவெளியே ஸுகானந்தப் பேரொளியே வடி வேலா
2. பேதாதி பேதமற்ற பெருமான்றனை பஜித்தால் வேதனை தீர்த்திடுவான் வேலன் கண்ணால் பார்த்திடுவான் வடி வேலா



## இராகம் - பிலஹரி - ஆதிதாளம்.



பல்லவி.

சக்திவேல் கைகொண்டகுகனே உன்னை நித்தியமும் பக்தியுடன் ஸ்துத்தியங்கள் செய்ய அருள் - சக்திவேல்

அநுபல்லவி.

பக்தியுடன் பணியாத குற்றமனைத்தும் பொறுத்து வெற்றிமயி லேறிவந்து சித்தமிரங்கிக் காத்திடும் [சக்திவேல்

சரணம்.

1. குஞ்சரி வஞ்சியுடனே கோலமயில் மீதிலேறி குன்றி லாடல் செய்யும் குமரா. வஞ்சனை கொஞ்ச மில்லாமல் வாட்டம் தவிர்த் தெனைத் தேற்றி செஞ்சிலம் பணியும் திவ்யகஞ்ச மலர்பாதம் தாரும் சக்திவேல்



## இராகம் - அரிகாம்போதி - தாளம்சாப்பு.



பல்லவி

அய்யனே க்ருபை செய்குவாய்-அடியார் போற்றும் மெய்யனே க்ருபை செய்குவாய்

சரணம்.

1. வேலாயுதம் கைக்கொண்டு வேளூர் தனிலே நின்று பாலனுப் விளைபாடவே பக்கத்தில் அன்னை பரிந்து ஆனந்தம் கூடவே விந்தைகள் செய்த அய் [யனே

2. ஆண்டி உருத்தரித்து அறனஸ்திரம் மறைத்து தாண்டிமயின் மீதேறவே தானவ ரெல்லாம் தாமரைமலர் தூவவே ஜெயித்த முருகய்யா அய் [யனே



## இராகம்- மாயாமயகௌளம்- ஆதிதாளம்.



பல்லவி.

செந்தில் வேலவன் திவ்ய சரணத்தை
சிந்தையில்வை மனமே

அநுபல்லவி

தந்தி முகவன் ஸகோதர சிங்கார — செந்தில்

சரணம்

1. பக்தனு மிந்தரன் பத்மபலர் தூவவும்
பக்கத்தில் பால்க்கடல் பணிந்துமே தாவவும்
பக்தனும்பத்மன் தத்வஜமீதில் கூவவும்
பாந்தாமனும் பன்னகசயனம் மேவவும் — செந்தில்

2. கந்தன் கருணைபமிர்த மளித்திட
கருது வோர்க்குள்ள களங்க மொளித்திட
கந்தனைகண்டவுடன் கண்கள் களித்திட
கர்த்தன் மீதில் பன்னீர் மழைகள் துளித்திட — செந்தில்



## இராகம்- பிரதாபசிந்தாமணி- ஆதிதாளம்



பல்லவி.

இன்னமும் யெந்தனிடத்தினில் வரோதோ.
இருவர்கள் சூதோ. மாதரி யெளியேனிடத்திதோ
[இன்னமும்

சரணம்

1. என்போலவே யுனக்கிரு மாதரில்லையோ
அன்பனே யுனக்கு அவர் சொல விலையோ
துன்பம் தவிருதலும் தோகையர் வலையோ
தென்புரம் விட்டுத் திரும்பவும் துலையோ
இன்பமாய் விளையாடிருப்பதும் மலையோ இன்னமும்

2. ஸத்ஜன போஷக னென்பதும் பொய்யா
சரணமடைந்தேனை தர்க்கார் முருகைய்யா
சதுர்மறை போற்றிடும் ஷண்முகதுய்யா
சரவண பவனெனப் பேர் கொண்ட மெய்யா.
சங்கர னருளிய சடையாண்டி பைய்யா இன்னமும்



## இராகம்-சங்கருபரணம்-ஆதிதாளம்-வர்ணம்



பல்லவி

சிவஸுப்ரமண்ய தேவா தேவஸேனுனுத ஸ்வாமினுத
சிவ ஸுப்ரமண்யதேவா தேவஸேனு னுத ஞான
[போதகுகசிவ

சரணம்

1. அயன்மாலர்ச்சிக்கும் அறவிந்த அ
பாதா. நீ. தாதா. யென்மேல்வாதா. இருவர் கர்தா
ஸனகாதி போதா- ஸேனு- நாதா-லீலா- விநோதானுல்
வேதாமலர்பாதா நால்வேதாம

முடுகு

வீரனே அதிகதீரனே குறத்தி சோரனே அடியேனைக்
காரனே
அஸுரஸு ப்ரஸம் ஹாரனே ஆறவதாரனே அறன்குமா
[ரனே
அமரர்க்குபகாரனே சிவ ஸுப்ரமணிய

2. கந்தா உமைமைந்தா கருதும் பக்தர் ஸொந்தா ஸுகந்த
கமலபாதா ரவிந்தா பதந்தாரும் நிதந்தோறும் பணிகு
[வேன்
வாரும் வாரும். பாரும் கலிதீரும் நினைத்த வறந்தாரும்
அந்திவண்ணன் மகிழ. தந்திமுகன்புகழ விந்தைகள்
[செய்து
திருச்செந்தில மர்ந்த ஸ்வாமிநாதா. லோகநாதா
ஸேனாதை சிவ ஸுப்ரமணிய

3. ஆதியே அரனுக்கும் போதியே அரிவயீர் பாதியே
அலைகங்கை ஜோதி ஸுக வொளியும் நீயே
வேலா அக்ஷர புஷ்ப்ப. மாலா. மாதவன் மகள் லோலா
அஸுரகுல ஹாலா-அமரர்க் கனுகூலா-அரன்மகிழும்
[லீலா
அமுர்த குணசீலா. அயன் பணியும் காலா
குமறகுருநாதா-யென்மேல் வாதா ஸ்வாமிநாத சிவ
[ஸுப்ரமணிய

4. ஆண்டிவேஷங் கொண்ட அய்யனே. மாயாண்டி
[வேஷங் கொ.
தாண்டிவரும் பாசுபதம் வேண்டியே பணிந்திடச்
செய்வேலா,
ஆண்டியாகி நின்ற அய்யனே உடன்

தாண்டிமைபி லேறிவரும் கந்தனே குந்த நிகர் தந்தனே
பக்தரிட ஸொந்தனே செவந்த அறவிந்த பதனே
கோலஹாலமாய் மாலயனுடன் விசால ஆழி
மீண்டு விரைவில் வந்தவா.
பாபம்தீரப் பரமனை பக்தியுடன் பூஜை செய்து
பரங்கிரி தனி விந்திரன்பாவையை மணந்த குருநாதா
ஸேனாத ஸ்வாமிநாத சிவ ஸுப்ரமணியா



இராகம்-மத்யமாவதி-ஆதிதாளம்.



பல்லவி

சக்தி வடிவேல் கைப்பனே சரணம்
சிவஷண்முகங் கொண்ட மெய்யனே

அனுபல்லவி.

நித்யமு முந்தனே, ஸ்துத்தியங்கள் செய்யாத
பித்தனாகிய யென்மேல் முற்றும் தயைசெய் சிவ-சக்தி

சரணம்

1. அடியார்துயறந் தீறவே அலைகடலருகன்புடனமர்ந்
தோனேயிருகொடியார் குஞ்சரி வள்ளி கூடமயிலி
லேறி கோட்டத்தில் சிறந்தோனேகுடியா யென்மன
மென்னும்கோட்டைக்குள் வஸித்திடாய் நெடிய வேல்
பிடித்திட்ட நித்யனே. ஸத்யனே. சக்தி



## இராகம் - ஆனந்தபைரவி - ஆதிதாளம்



பல்லவி

கந்தனே உந்தன் சரணம் கருணை செய்ய
யெந்தன் முன்னே நீ வரணும்

அநுபல்லவி

அந்தமுடைய திருச்செந்தூர் நகர்தனிலே
விந்தையாய்ப் பள்ளிகொண்ட சந்தி வண்ணன் மருக.
[கந்தனே

சரணம்

1. கன்னியிருவருடனே கடல்க் கறையிலுன்னிஅமாயமர்ந்
[தோனே
பொன்னின் நகர் வாஸனும் அன்னவா ஹனயனும்
சென்னி வணங்கும் அரன் வன்னி கண்ணி லுதித்த
[கந்தனே



## இருகம் - சுருட்டி - ஆதிதாளம்



பல்லவி

கண்டேன் கலிதீர்ந்தேன் கருணை யமுதுண்டேன்
உளந் தேர்ந்தேன்

சரணம்

1. கண்டேன் கடல்க்கரையில் கண்சள் களித்திடவே நின்
றேன் நிலைதனிலேகொண்டேன்குமரனருள் கண்டேன்

2. பக்த மயிலிலேறவும் பத்மன் கொடியில் கூவவும்
பாந்தாமன் மகளிருபக்கமும் குலவவும் கண்டேன்

3. கெந்த மலையிலேற அந்தணருசிகூற
ஸொந்தன வலக்ஷர்கள் குந்தமலர் கள் தூவ கண்டேன்



## இ ரா க ம்- க மா ஸ்- ஆ தி தா ள ம்



பல்லவி

வேலவனை துதிமனமே வேளையில்
கார்த்திடும் பொதுயினமே வடி வேலவனை

சரணம்

1. யிச்சைமிகும் யேறகனே அச்சுதனுடய மருமகனே
அருமுகனே வடி வேலவனை

2. வள்ளியை மணந்தவனே. புள்ளிருக்கும்வேளூர்
புகுந்தவனே அமர்ந்தவனே வடி. வேலவனை



## இ ரா க ம்- ய மு ணு க ல் யா ணி ஆ தி தா ள ம்



பல்லவி

தீனதயாளா-தீன கிருபாளா. ஸேனு. மணாளா-பன்னிரு
தோளா தேவ ஸேனு-மணாளா பன்னிருதோளா.

சரணம்

1. கான்மயில் வாகனே ஞானசக்தி வேலனே
மானே-மணந்த வனகுஹனே குற- மா, தீனதயாளா

2. செந்தில்நகர் வாஸனே தேவராஜ பூஜனே கெந்த மலை வஸிக்கும் யீசனே யெதிர் விக்கைதயுள நிதியில் நேச னே தினதயாளா



இருகம்- ஸகாணு- தாளம் மிஸ்ரசாப்பு



பல்லவி

திருமால் மருகோனே குருநாதாவருவாய் யெனை யாளதயவுடன் வர திருமால்

அநுபல்லவி

வருவாய் பொன்மயிலேறி வள்ளி குஞ்சரியுடன்
அருளால் ஞானமும் அகலாபக்தியும் பிறவாவறமும்
பிரியமாய்த்தற திருமால்

சரணம்

1. சரவண பவவேலா. யிமகிரி சங்கரி மகிழ்பாலா
பொங்கும் மாமயில் வாகா பூரணனந்த தேகா
ஸரஸகீதனே ஸனகபோதனே சதுர் வேதனே ஸ்வாமி
[நாதனே திருமால்



இராகம்- நாதநாமக்கிரியை- தாளம்- மிஸ்ர சாப்பு



கண்ணிகள் பல்லவி.

1. வாரீர் திருச் செந்தில் வஸிக்கும் ஷண்முகப்ரபோ
வள்ளி குஞ்சரியுடன் வாரீர். பயந்தும் என்னை அரு
[ளால் டாறீர்

2. நிதிபருகினில் திருப்பதி கொண்ட தேசிகா அதிசெப்
அடியேன் படுந்துன்பம் துறத்திக் கண்ணால் பாரீர்
[நீர்வாரீர்

3. ஸொர்ணகிரி ஸ்தபாம் சுந்தரி மகிழ் பாலாவர்ண
மயில்மேல் யென்முன் வாரீர் வானவரை புரத்தாற்
[போல் பாரீர்

4. வேலேந்தும் கைப்பனே வேண்டினோர் மெய்பனே
பாலரூபமாய் யென்முன்வாரீர்-அருள் பன்னிரு நயனத்
[தால்பாரீர்



இருகம் - உசேனி - தாளம்மிஸ்ரசாப்பு



பல்லவி

ஷண்முகா பதம் பணிந்தேன் வரம்தா செந்தில் ஷண்
[முகா

அநுபல்லவி

பெண்ணின் மையலால் ஸ்வயுவர்ண மொளித்தாய் செந்
[தில் ஷண்முகா

சரணம்

1. மாசத மயில்வாகாவள்ளி குஞ்சரி மோகா
சரண மடைந்த யிந்திரன் தாபந் தீர்த்திட்ட செந்தில்
[ஷண்முகா

2. வேதாகமனே ஸனகாதி போதனே சதுர்வேதனே
படும் வாதனை தீர்த்தாள் ஸங்கீத பிரியனே செந்தில்
[ஷண்முகா



## இருகம்- சுருட்டி - தாளம் தேசாதி

பல்லவி கண்ணிகள்

திங்கள், கங்கை ரவி அங்கிமான் டமருகம் சிறந்த கொன்றைதும்பை சூடுவோன்பாலா, சங்கரி மடியில் ஸதா நடிக்குங்கமலபதம் சரணம் சரவண பவவேலா சிவஷண் முகவேலா

சரணம்

வேறு கெதிகளினி யாறுமில்லை யென்முன் வாரும் பாரும் காரும் யெனைச் சேரும், அருகினில் சிலம்பணி பொர்பதத்தை தாரும் ஷண்முக

முடுகு

தில்லை காளியோடாடிட வெல்லயில் பல்லுயிர் காண [வோர்

பாதந் தூக்கியே ஜய ஜப வென புலிபாம்பும் மகிழ்வுர நடிப்போன் பாலாமிக (மெதி) செல்வமளித்துந் தன் செந்தாமரை பதத்தின் தெரிசனம் தா சிக்கில் சிங்கார வேலா

2. மஸ்யகூர்மவராக. நறஸிம்மவாமன பரசுராம ரகுராம கிர்ஷண கலிதசாவதார மாயநாடகஞ் செய்பவன் [மருகோனே

முடுகு

கண்ணுவர் சாபத்தால் கானகந்தன்னிலே பெண்மானா [கிய

திருமகளுடனேவிண்ணும் மண்ணும் யிதுபுதிதென
ப்பொன் மானைக் கூடி (மெது)
மகளை யீன்றிட்ட மாமன் மகிழ்வுர வேண்டியே
வள்ளியையும் மணந்த முருகோனே.



இராகம்சுருட்டி-தாளம்மிஸ்ரசாப்பு.



பல்லவி

திருச் செந்தில் வேலவனை, ஷண்முக நாதனை தெரி
சித்துக் கொண்டேனே

அனுபல்லவி

பரிசுத்த. நிதி. ஸ்கந்த. தீர்த்தம் ப்ரணவகூபம்
ப்ராத ஸ்னனஞ் செய்து பக்திநீறு மணிந்து திருச்
[செந்தில்

சரணம்

1 யேகப்பொறுளிதுவே, யென்னும் பிரணவ மிங்கே
யிந்திரன் துயர்தீற. யேற்ற ஷண்முகம் அங்கே
யிலைநீர், கெந்த, புஷ்பமும் போற்றிப் பூஜையுமிங்கே
யேகாந்த மாயிருவருடன் மகிழ்வதங்கே- திருச்செந்

2, குமற உருவுங்கையில் குலிச ஆயுதமிங்கே
கோமளா காரஷடானன வேலங்கே
அமரவருணன் அலைஉருவாய்ப் பணிவதிங்கே
ஆனந்த விலாஸமாய் யமர்ந்த மண்டபமங்கே. திருச்



## இருகம்சங்கரு பரணம் தாளம் சாப்பு

பல்லவி

யெப்போ தானிறங்குமோ. யேதோ நின்திருவுளம்
[யெப்போதான்

அனுபல்லவி

ஒப்பில்லா மாணிக்கமே உன்னைநான் கைதொழுதேன்
அப்பனே அய்யனே ஆருமுக வேலவனே யெப்போ
[தான்

சரணம்

1. ஓடினேன் வெகுஸ்தலம் தேடினேன் நின்பதத்தை
வாடினேன் மனம் நொந்து நாடினேன் திருச்செந்தில்
கூடினேன் ஸன்னதியில் பாடினேன் நின்புகழை
சூடினேன் யிலை நீறு மோடி செய்யாமல் மனம்
[யெப்போதான்

2. ஆருமுக மிலங்க அய்யன் கைவேல் துலங்க
சேருங்கிரீட முடன் திவ்யப் பணிதுலங்க
வாரும் மணல் மீதேறி பாரும் யேழாந் திருநாள்
ஆருங்காணாத பதம் அடியேனுக் களித்திட
[யெப்போதான்

3. முன்தெரிசனம் வேலன் பின்தெரிசனம் நடம்
நன்கொலி வாத்யமுடன் நால்வேதமும் முழங்க
பன்னீர் பக்தர் சொரிய பாவை நடம்புரிய
கன்னி மாடவீதியில் காக்ஷிதந்தருள் செய்ய
[யெப்போதான்

## இராகம்-குரிஞ்சி-தாளம்-ரூபகம்



பல்லவி

சரணம் ஷண்முகாவேலா சரணம் ஷண்முகா குகா.
சத்துரு. ஸம் ஹாரனே வேலா                    சரணம்

சரணம்

1. கானமயில்வாகனேஞானரூபதேகனே ஸேனா நாதனே
தேவஸேனா நாதநேகனே அநேகனே விசாகனே ம.
யூகனே வேலா                    சரணம்
2. செந்தில் வாழுங் கந்தனே உந்தன் பாதம் நம்பினேன்
திருச்செந்தில் வாழுமந்தனே நானுந்தன் பாதம் நம்பி
[னேன்
யெந்த நாளுமே. வேலா யெந்த நாளுமெந்தனே பந்த
[மாய் மிக
அந்தமாய் ஸொந்தமாய் வந்து காருமே                    சரணம்



## இராகம்-சுருட்டி-தாளம்யேகம்



பல்லவி

இத்தினே பருமுகமா-இன்னமுங் கோபமாகுமா

அநுபல்லவி

கற்தனே உனேயே நம்பி பித்தனைப் பிதற்றுமென்மேல்
[இத்தினே

சரணம்

1. அத்திமுகன் ஸோதிரனே, சத்திவேல் பிடித்தவனே
க்ருத்திகைக் கன்னியர் போற்ற நித்யமும் வளர்ந்த
[கந்தா இத்தினை
2. ஒருவரையும் போற்றமல் உன்னை நான் பணிந்திடவே
நீ இருவர் மோகத்தி லிருந்தால் யெனக்கருள் செய்வ
[தெப்போ இத்தினை



இராகம் - உஸெனி - தாளம் சாப்பு



பல்லவி

கௌரிபாலா கௌரிபாலா குணசீலா
வடிவேலா ஹிமகிரி கௌரீபாலா

சரணம்

1. நித்யமும் உந்தனை பத்தி நானுறைத்தாலுன்
சித்தமு மிறங்காதாநான்
பித்தம் பிடித்ததுபோல் கத்திமுறயிடலுன்
காதினில் கேளாதா ஆனல்
காரணம் மிகவுண்டு நாரணன் மருகனே ஆரணம்
புகழ்பரி பூரணன் மகிழ் கௌரி பாலா
2. வரம்பெற்ற சூரனும் மயிலாகிக் கூவுற
வர்ணத்வனியினுலேயோ உந்தன்
பதம் பெற்றபத்மனும் பறந்துத்
வஜமீதிலே பகரும்த்வனியினுலேயோ உந்தன்
அருள் பெற்ற ஸாரதியாகிய மாருதன்
அசைவொலி யாலோ வரிதிலுலியோ கௌரிபாலா



## இராகம்-ஸ்ரீ ராகம்-தாளம்-ரூபகம்

பல்லவி

செந்தில் வடிவேலா உந்தன் தெரிசனம் தந்தருள் வாய்
[திருச் செந்தில்

அனுபல்லவி

அந்திவண்ணன் அருகாயெனை ஆதரிப்பாய் முருகா
[திருச் செந்தில்

சரணம்

1. ஓரார்முகம் யீராறுகரம் மூவாறு நயன முடன்
பேறார் வள்ளி தெய்வானை யின்பெருமானே யென்னெ
திறுகவே [செந்தில்
2. கற்ணகுண்டலம் யிலங்க கைதனில் வேல் துலங்க
ஸ்வர்ண கிண்கிணி குலுங்க சூரபத்மன் மிகக்கலங்க
[செந்தில்

## இராகம்-பியாக்-தாளம்-ரூபகம்

பல்லவி

செந்தில்வேலா யிந்தவேளை வந்தெனைக் காருஞ் சிந்தை
[துயர் தீரும்

சரணம்

1. கந்தன் பதத்தை போற்றி செய்பவர் கலங்கிடலாமோ
உந்தனுக்கிணை யிந்தவுலகி லொப்பிடப் போமோ
வேறொரு வருமாமோ செந்தில்

2. தந்தை தாயும் நீ ஸொந்த சேயும் நீ சுந்தரிபாலா
யெனையிந்த வேளைவந்து கார்த்து யெனக்கருள் சீலா
யேறகவ்டி வேலா செந்தில்



## இராகம் - பைரவி - தாளம் - ரூபகம்



பல்லவி

நீ கிருபை செய்யாமல் யார்கிருபை செய்குவார் நிஜரூப
[தேசிகனே

அனுபல்லவி

பார்புகழ் திருச்செந்தில் பதிகொண்ட தேசிகா
[நீ கிருபை

சரணம்

1. யெதிருளி சூரனும் யெடுத்தான் மயிலதாக
பகையாளி பத்மனும் பறந்தான் த்வஜமதாக
கதிர்ஸூர்யனும் காதில் கவிந்தான் குண்டலமாக
யெதிரினில் வருணனும் யிறைந்தான் வாரிதியாக
[நீ கிருபை

2. யெனக்கு நீ யிறங்காம லிருப்பது ஞாயமோ
யோதோ பாருதது போலிருப்பது பாயமோ
அன்பரைக் காராவிடிலது நேயமோ
தெய்வானை குறத்தி யிருவர் செய்யும் மாயமோ
[நீ கிருபை



## இருகம் - பியாகடை - ஆதிதாளம்



பல்லவி

கடல்க் கரையா உனைநான் கண்டு தெரிசிக்க நீ கரு
ணை யெப்போதுபுறிவாய்

அனுபல்லவி

மடமங்கை யிருவரை, மருவி, மயூரமீதில்
திடமூடன மர்ந்திட்ட செஞ்சிலம்பணிபாத கடல்

சரணம்

1. அண்டம் ஆயிரம்பெற்ற அஸுர சூரமயிலும்
மண்டலஞ் சிருஷ்டி செய்யும் மாயாஸுத சேவலும்
தொண்டர்களுந்தனை ஸ்தோத்ரம் செய்யும் குறலும்
கண்டென் மனமகிழ யென்று வரமருள்வாய் கடல்
2. வீரபாகு வீரகேஸரி வீரதுரந்தற வீர
சந்திர வீரபுரந்தர வீரராக்க்ஷஸ
வீரமார்த்தாண்ட வீராந்தக வீரதீர
நவ வீரஸகோதர கடல்



## இருக்ம் - கானடா - தாளம் - ரூபகம்



பல்லவி

ஸ்வாமி நாதனே சிவ ஸ்வாமிநாதனே

அனுபல்லவி

ஸ்வாமிநாத சதுர்வேத ஸௌனகாதி ஞானபோத
[ஸ்வாமி நாதனே

சரணம்

1. வாணிபதி உந்தன் மகிமையை அறியாததாலே
வேதத்தின் பொருளுரைப்பாய் வேலாவென்று கேட்க
நீர் படித்த விருத்தரே பிரணவப் பொருளைப் பகரென்
றுரைக்க மருண்டு பிரம்மன் முழித்த நிமிஷம் சிறையி
லிட்டுமூவர் போற்ற விடுத்த வீர ஸ்வாமிநாதனே



இருகம் - செஞ்சுருட்டி - தாளம் ருபகம்



பல்லவி

வேலனைக் கண்டு தெரிசிக்க வென்று விரும்புவாய்
[மனமேவடி வேலனை

அனுபல்லவி

வேலஜால ஸுகுண சீலபார்வதி பாலவடி வேலனை

சரணம்

1. க்ரௌஞ் சகிரியை சக்திவேலினால் கண்டம் செய்தானை
இந்த பிரபஞ்சம் முழுதும் பால ரூபமாய் லீலை செய்
[தானை வடிவேலனை

2. சூறன்குலத்தை வேறறுத்து செந்தில்வந்தானை
அந்தபாபந்திர பாணலிங்கத்தை பிரதிஷ்டைசெய்தானை
அந்த பாபந்திர தாய்மணாளனை பிரதிஷ்டை செய்தானை
[வடி.வேலனை



## இருகம்-எதகுலகாம்போதி-தாளம்-யேகம்

பல்லவி

யேதோ கூர்வடிவேலா இன்னம் இறங்காமலே யிருப்ப
[துனக்கு நியாயமோ

அனுபல்லவி

வாதோ யிரங்கிடலாகாதோ பேழைமே வின்னம்
[யேதோ

சரணம்

1. சூராரைஸம் ஹரித்து தேவர்துயரம் தீர்த்து
பார்புகழ் செந்தில்வந்த பால்ஸுப்ரமணிடனே

முடுகு

கோலகலத்துடன் நீலமயிலின்மேல்
பாலரூபமாய் வேலையேந்து வோய் [யேதோ

2. தென்பறங்குன்றமர்ந்து திரு தெய்வானையை மணர்ந்து
யின்பமாய் நவலக்ஷர் யேழுலகோர் பணிந்து

முடுகு

போற்ற மகிழ்ந்திடும் புனிதனே யென் மேல்
வேற்று முகமான விதமே தையனே [யேதோ

## இருகம்-நீலாம்புரி-ஆதிதாளம்

பல்லவி

யோதோ சொல்கிறு ளென்றுகாதுகேளாதது போல்
யிருந்திடாதே நீ அய்யா முருகேசா நான் ஏழை-
யெனக்கிறங்கும் குமரேசா

சரணம்

1. அலர்ந்தமல ரெடுத்துன் அடியிணை பூஜை செய்ய
அறியாத சிறியனே ஞானும் உந்தன் மலர்ந்த
முகத்தால் பார்த்து வாவென்றழைத்தெ னக்கு
வரம்தற வேணுமய்யா உமைபாலா யோதோ

2. காணவே ஆசைகொண்டு கடல்கரை தனைத்தேடி
கடுகிநடந்து வந்தேன் வடிவேலா உந்தன்
கடைக் கண்ணால் பார்த்தெந்தன் கவலையை நீக்கியே
காற்பதுன் பாறமையா வடிவேலா யோதோ

## இருகம்-செஞ்சுருட்டி-தாளம்-யேகம்

பல்லவி

வாரும் வந்தென்னைக்காரும் வரத்தைத்தாரும் முருகா
[நீர் வாரும்

அனுபல்லவி

என்னைப்பாரும் பார்த்துசீரும் அருளும் பச்சை மால்
[மருகாநீர் வாரும்

சரணம்

1 எங்கிலும் புகழ் கொண்டதோர்-சிவசங்கரன் மகனே
என்னங்கமுருக காக்ஷிதந்தென்னை ஆள்வாய் குஹனே
[நீர் வாரும்

2. கலைமகள் லீல, மலைமகள்பால காருண்ய சீலா-இந்த
அலைகடலுரா செந்தில்ப்பதியிலமர்ந்த சூர்வேலா நீர்
[வாரும்



## இராகம்-காம்போதி-யேகதாளம்



கண்ணிகள்

1. வேலா யென்னைக் காத்தருள்வாய்
சீலாஉன்னை கைதொழுதேன் பாலனை போல் காரப்
பாறமையா மால்மருகா [பதுந்தன்
கந்தனே கந்தனே கந்தனே சுந்திரனே [வேலா

2. அத்திமுகன் சோதரனே
பக்திசெய்தேன் உன்பதத்தை
சித்தம்தன்னில் தயவுடன் முற்றிலும் நீகாத்தருள்வாய்
முருகனே முருகனே முருகனே அருமுகனே [வேலா



## இராகம் - சங்கருபரணம் - தாளம் - சாப்ப

பல்லவி

வடிவேலவனே உன்னிருதாள் சரணம் கூர்வடி
[வேலவனே

அனுபல்லவி

அடியார்க்கருளும் ஆருமுகன் பதத்தையிடைவிடாமல்
ப்பணிப எனக்கு வரம்தா செந்தில் வடி வேலவனே

சரணம்

1. அண்டமளந்தவன் இரண்டுபெண் கொடுத்
தானந்தத் துடன்படுக்க
அண்டையிலேநிதி அலைகளோங்கிட
அமிர்தம் சந்திரன் விடுக்க
அண்டர் பதியிந்திரன் ஆவலாயுன்னடி
அடைந்திட மனதை முடுக்க நீர்
கொண்டவாஹன மயிலும் மரகதக் குடை
விடுத்திட கொலு வமர்ந்திடும் வடிவேலவனே

2. இருவர் போர்செய்யும் மத்திதனிலே நீர்
யிருந்து வழக்குறைத்தாலும்
கருதும் ஸனகர்க்கும் காக முனிவர்க்கும்
பிரணவமுரைத்தது போலும்
அருமைச்சேய் படும்துயர் அறிந்து நீர்
அருள் செய்திடுவீர் மென் மேலும் யென்னையனே
ஷண்முகதுய்யனே பன்னிரு கைய்யனே
நான்தொழும் மெய்யனே சக்தி வடிவேலவனே

## இருகம்-காம்போதி-ஆதிதாளம்



பல்லவி

செந்தில் வடிவேலவன் பதம்தினமும் பூஜியாமலே
இந்த உலகவாழ்க்கை நிஜமென்றிருந்தேன் நான் தெரி
யாமலே — திருச்செந்தில்

சரணம்

1. அறியாச் சிறியேன் செய்த பிழையை ஆதரித்தே நீ
கார்த்திடாய், சற்றும் பரிவா யென்முன் மயில்மேல்
வந்து பக்தர்துயரைதீர்த்திடாய் — திருச்செந்தில்

2. பத்ம சூரனை வென்று தேவர் பயத்தை தீர்த்த
அய்யனே பாதவிக்கும் யென்யேழை முகத்தை
பார்ப்பாய் பன்னிருகைய்யனே — திருச் செந்தில்



## இராக்ம்-கரகரபிரியா-தாளம்ரூபகம்



பல்லவி

செந்தில் வடிவேலவா-உன் விந்தையை நானறிகிலேன்

சரணம்

1. அந்தமயில் வாகனனே யெந்தன்துயர் தீர்ப்பவனே
ஸொந்த பக்த்தருள்ளகனே நீ சுகமுனிதேசிகனே
வடிவேலா-தி-சீலா-கிரிஜைதன் பாலா, சுகமுனிதேசி
[கனே செந்தில்

2. குஞ்சரியை மணந்தவா குறமாதை யணைந்தவா
தஞ்சமென்றோரை யுகந்தவா சரவணத்தில் வந்தவா
பலதேவர் துதிக்க பராசன் மதிக்க சரவணத்தில் வந்
[தவா செந்தில்



## இருகம்-அமீர்கல்யாணி-தாளம்சாப்பு



பல்லவி

கடல்க்கரை வாழ்முருகைப்பா நான் உன்னைக்
கனவிலும் மறவாமல் துதித்ததும் பொய்யா

அநுபல்லவி

மடல்க்க மழ்சோலைகள் வாழ் முருகையா மயங்கி
னோரை ரக்ஷிக்கும் மாயாண்டிப் பைய்யா கடல்

சரணம்

1. அய்யனே பன்னிருகையா உந்தன் அடியேனுக்
கிரங்கிடும் அருமுக மெய்பா
துய்யனே உனைப்பூஜை செய்பசற்றும்
தோன்றுயெதிர்வரத்தா மதமேதென்னப்யா கடல்

2. செந்தில் வந்தமர்ந்த பொர்பாதா வென்மேல்
சித்தமிறங்கிடாமல் இன்னமும் வாதா
வந்திக்கும் ஸனகாதிபோதா உனையே சிந்திக்கும்
சிரியேன்க்கும் சிறருள்வேதா கடல்



## இராகம்-கரகரப்பிரியா-ஆதிதாளம்



பல்லவி.

வடிவேலவனே யென்முன்னே நீமயில்வாஹனமேல்வா

அநுபல்லவி

அடியார்க்கருளும் ஆறுமுகவனே
உனை படியாக் கேடியேன்
முன் றுடியிட யாருடன் வடி — வேலவனே

சரணம்

1. ஆரணம் புகழ்ந்திடும் அரனருள் பாலனே
நாரணன் மருகனே நால்வேத ரூபனே
காரணனே நீஜெகத் பரிபூரணனே தத்வத்தோரண
ரதமீதில் ஏரணத் வஜமுடன் — வடிவேலவனே



## இருகம்-ஸாவேரி-ஆதிதாளம்



பல்லவி.

ஹிமகிரி ஜாபாலா யேசக்திவடிவேலா
யெளியேன்மேல் கோபமேதிந்திர ஜாலா

அநுபல்லவி

அமராரக்ஷகசீலா அரிஸுதயாலோலா
அமிர்த ஸத்குணமேலா அபனிந்த ரனுக்கனுகூலா
[ஹிமகிரிஜா

சரணம்

1. அரனுதல் விழியினில் அனலுருவாயுதித்து
அலைகங்கையில் நடித்து அலர்ந்த மலர் படுத்து
அமரர் காணக்கூவ அகிலமானந்தமேவ

முடுகு

அரிபிந்தர நயன்தேர கயிலையில் அன்னை சிவனைத்தூற
சங்கரன் அருளுடனு மையவளுடன் விடயேற அருகில்
லக்ஷர் நவர் ஸ்தோத்திரம் கூர அம்பிகை ஆனந்தமுட
னறு சிருவரை அணைத்துத் துபரம்மாற
ஆசிகூற அருகிருக்கும் ஓங்கார ஹிமகிரி

2. சிருவனைப் விளையாடச்சிறையில் அபனையிட்டு
சீரிப க்ரௌஞ்சனை சிதரிட வேல்விட்டு
சீக்கிரமாய் தாருகன் சிறத்தை விழக்கண்டித்து

முடுகு

சென்று மகேந்திரம் நாடசூரனும் தெரிந்துடன் யுத்
[தம் கூட
வேலினல் ஸிம்மவக்திரனுடன் சூரனைவென்று
தயவுடன் பத்மனைத் வஜமாக்கிக் கொண்டு தேவர்
[மூவர் சூழ
செந்தில்வந்து சிவலிங்கம் வைத்து பணிந்தகுஞ்சரியை
மணந்த ஸேனுபத்யமமற்ந்த ஹிமகிரி

## இராகம்-தோடி-தாளம்ரூபகம்

பல்லவி.

அருமுகன் பாதம்-அனுதினம் பணி வேலைப்பன்
பதத்தை உன்மனந்தனிலணி-செந்தில் அருமுகன்

அனுபல்லவி.

தருணமங்கை யரிருபுரம் யேற்றிடும்
வருணன் பன்னீர்த்துளி மலர்களால் சாற்றிடும்
[அருமுகன்

சரணம்

1. சந்திவரனும்-உந்தியுதித்தோனும்
செந்தாமரைப் பதமும் சிரமும் காண,
உந்திப் பறந்தும் உழுதும் களைத்திட்டு வந்தித்
தளவில்வறம்தந்தோன் பாலனும் அருமுகன்
2. தரணிரதம் சந்திர சூர்யரிருசக்கரம் சதுர்வேதம், அசு
வம் ஸாரதி பிர்ம்மா தனுர்மேறு, அறவம். நாண
அறிபாணம் ஆழிதூணி அனைத்தும் சிரம்வணங்க
நகைத்த ஜெயவீரன் பாலனும் அருமுகன்



## இருகம்-நாதநாமக்கிரியை-தாளம்சாப்பு



பல்லவி

மயிலேந்தும் பாதா-மதியில்லா-மைந்தன் மேல் வாதா

அநுபல்லவி

துயில்பவர்போல் ஜாலம் செய்யாமல் துரிதமாய்
கையில் சக்திவேலுடன் காக்ஷிதருவாய் பக்த
[மயிலேந்தும் பாதா

சரணம்

1. தினமுமுனை நினைந்து மனமும் மிகவுமினைந்து
தேவாஊனை வியந்து சிந்தைதனில் மகிழ்ந்து
திருச்செந்தில் வேலனை தெரிசனம் செய்யாதால்த்
தெளிவிலா மலலையும் சிறியேன்மேல்க் கருணையாய்
தயவின்னங்கானேன் மூடனுனுன் மேல் புலம்பினேன்
வீணேஸன்னதி வந்து துறையைப் பணிந்திடாமல்
குறையை மொழிந்திடாமல் பறவை போல லையுமென்
பரிதாபம் தீர்த்தென்னைப் பார்த்தருள் கந்தாடணிந்
திடும் பக்தர்க்கு ஸொந்தா கிருபையுடன் வாரும்
மனக்கவலை தீரும் நினைத்தவறம்தாரும்-நிதியும் ஸப்த
காரும் கவியும்செந்தில் மயிலேந்தும் பாதா

2. சிருவனுய் விளையாடல்ச் செய்திடும் ஒருமுகம்
அருளுப தேசிகம் அமர்ந்திடும் ஒருமுகம்
வருசூர ஜயபட்டம் வகித்திடும் ஒருமுகம்
வள்ளிக் குஞ்சரி மந்தஹாஸம் ஒருமுகத்தில்
வாஸவன்போற்ற மனதிரங்கி மனத்துயர் மாற்ற
லக்ஷருடனே ஆசையாய்விளையாட்நேசமோடொருமுகம்
கேசவன் அயனிடம் கிருபை கூறும் ஒருமுகம்
பூஜை செய்பவர்க்கன்பு புரிந்திடும் பலமுகம்
போற்றறி யானுயேன் தோற்றம் அறிந்து மின்னம்
தாமதம்யேதோமா துலனிந்தரன்-மகள்செய்யும் சூதோ
யேழை அறியேன்-பவகோரத் துழன்றுன்னை

பணியேனுக்கருள்தா நவவீரருடனே•யீக்ஷணம் யென்
முன்வா பக்த்த மயிலேர்தும் பாதா



## இராகம்-யமுனகல்யாணி-தாளம்ரூபகம்



பல்லவி

வேலனைநான்-தெரிசனம் செய்ய வேணு மென்றால் தய
வில்லை வல்லைவேலனைநான் தெரிசனம் செய்யவே

சரணம்

1. அரி அயனிந்திரன்•பணியும் பாதா-அடியேன் மீதிலின்
[னம்வாதா
அன்பராம் ஸனகாதிபோதா அரியனூன் மறைபுகழ்
[ஸங்கீத வேலனை

2. வள்ளிகுஞ்சரி மருங்கில் நின்றிட
புள்ளிமயிலின் குடைவிழிந்திட
துள்ளியேநிதி அலைபெழும்பிட
தெள்ளமுதென்னும் தேவனும் செந்தில் வேலனை.



## இராகம்-ஸரஸாங்கி-தாளம்-ஏகம்



பல்லவி

வேலாயுதநாதா யென்மேல்வாதா வரம்தா வடி வேலா

சரணம்

1 காலனை யுதைத்தவன். பாலா.
அதிக குணசீலாமணக். கோலா

தெய்வங்கள் க்செல்லாம் மேலா.
யெந்தன் சிந்தைத்துயர். தீர்ப்பாய்
அறவிந்தப் பதனே வடி [வேலா

2. செந்தாமரை மலர்மேல்.
அந்தமாய். வளர்ந்த கந்தன்னே.
யென்முன்வாரும். கடைக்கண்ணினல்ப் பாரும்
பார்த்துக் கார்ப்பாய் யிடர்தீர்ப்பாய்.
துதியேர்ப்பாய் அய்யனே. வடிவேலா



இராகம்- நாட்டை- ஆதிதாளம்



பல்லவி

செந்தில்வாஸா சரணம் சரணம் ஸதானந்த
சக்தி ஸகித மயில் மீதுல்லாஸா.

அநுபல்லவி

இந்திரன் தன்புதல்வி க்கிசைந்து.
மணந்து சுகம் தரும் செந்தில்

சரணம்

1 சக்திவேலா நித்யன்பாலாஸத்வசிலா. பக்தர்
லீலா. ஸுப்ரமணியனே. சிவ ஸுத. ஸுய
சரவணபவ. சிவ. ஸ்வாமினத. திரு [செந்தில்

2. பதம் தாரும். நிதந்தோரும்பணிந்தேற்ற வரம் தாரும்
பரஞ் சோதியனே. ஆனருள் பரஞ் சோதியே
பக்தர் மகிழப்பர. யானந்த மறுள் திரு செந்தில்



## இராகம்- சுருட்டி- ஆதிதாளம்

பல்லவி

கண்ணாறக்காண் பேனோ, யி. ஜெனனத்தில் க்கானோ
[னோ அறியேன்

அநுபல்லவி

பெண்ணாப் பிறந்து நிதம். பெண்ணா தெல்லாமும்,
[பெண்ணி
புண்ணாகி நொந்து மனம் போன வழிபோகாமல்-
[கண்ணாற

சரணம்

1. கலைகளுணர்ந்தோர் துதியும் ஸன்னதியினில்
அலைபாய்ப் பணியும் நிதியும் வடதிசையில்
மலையும் வள்ளியின் பதியும் அருமுகவன்
சிலையில் பெடுத்தத்தநியும் நிதம்காணாமல்

முடுகு

உலையின் மெழுகதுபோல் உருகும் எந்தனுக் குந்தன்
யிலையின் விபூதிபெற்று யென்னேரமும் துதித்து
[கண்ணாற

2. அன்னைமகிழும்பாலா க்ரௌஞ்சனுக்கும்
ஆனைமுகன்க்கும் காலா சூரனைவெல்ல
பின்னையும் சக்திவேலா பாசுபதத்தை
முன்னைஜெயித்த ஜாலா தேவருடனே

முடுகு

சென்னை முழங்க திருச்செந்தில் வந்து தந்தையை
கொன்னைபில்வம் சம்பகம் கொழுந்துவேறர்ச் சித்
[தோன்பாதம் கண்ணாற



## இராகம்-அறிகாம்போதி-ஆதிதாளம்



பல்லவி

வாராய்வடிவேலா-மயூரமீதிலே

அநுபல்லவி.

பாராயுன் கருணைபால் தீராய்யென் கவலையைநீ வாராய்

சரணம்

1. ஸிம்மவக்த்தா தாருகன்சிரத்தை கொய்தவ
அம்மையுடன்யீசனை அர்ச்சனைசெய்து கந்தவா வாராய்
2. கார்த்துயென்னையாள்வாய்கண்ணன்மருகனே
பார்த்தன் வில்லடி யுண்டபரமன்திருமகனேநீ வாராய்

## இராகம்-பியாக்-தாளம்தேசாதி



பல்லவி

அய்யா உனைப்பேசுவேன் எனக்கருள்
செய்யா விடிலேசுவேன்

அனுபல்லவி

பைய்யா ச்டைப் பன்னிருகையா
சைலம் வஸிக்கும் [அய்யா உனை

சரணம்

1. ஓங்காரத்துட் பொருளை உற்றபடி புறைத்தும்
ஆங்காரம் கொண்டதினால் அடைந்தாயே ஸர்பரூபம்
2. ஞானக்கனிவேண்டி நயந்து அண்ணன் தின்றிட
கானஹம் மெல்லாம் திரிந்து களைத்துவந்தாய் கர்வத்
[தினால்-அய்யா
3. அண்டர் கோன்றன் மகளுன்னண்டையிலே தானிருக்க
கண்டார் நகைத்திட நீ கொண்டாய் குறமகளை-அய்யா



இராகம்-இந்துஸ்தானிகாபி தாளம்-சாப்பு



பல்லவி

செந்தில் வேலனைநான் தெரிசிப்ப தெப்போ

அநுபல்லவி

பரிசுத்த மனதுடன் பரவசமாகி திரு செந்தில்

சரணம்

1. மன்னன் சூரனைவென்று மையிலாக்கிக் கொண்டு
யின்னமும் பத்மன் த்வஜாதமீதில் நின்றதிரு- செந்தில்
2. அன்பரைக் கார்க்க ஆண்டிரூப மெய்தும்
தென்பரங் குன்றத்தில்த் திருமண மெய்தும் திரு-செந்
[தில்



## இராகம்-காபி-ஆதி தாளம்



பல்லவி

ஸாகரப் பிரியகுஹ சரணம் கமலபதம்

அனுபல்லவி

யோகபுரிவாஸா யெனக்கருள் செய்யும் நேசா  ஸாகர

சரணம்

1. திருபுரஸம்ஹாரக திருநேத்ரதாரக
அரிபுத்ரமாரக அர புத்ரரூபக  ஸாகர
2. ஹிமகிரிஜாபுத்ர ஹே திவ்யஷட்வக்த்ர
அமர-ராஜ மித்ர அஸுரகண்டன அஸ்த்ர  ஸாகர



## இராகம் இங்கிலீஷ் நோட்-தாளம் யேகம்



பல்லவி

சக்திவடிவேலர் குஹனேசிவ சக்திவடிவேலா
[குஹனே
வீர அத்திமோசன ஐங்கரன் ஸோதர  சக்தி

சரணம்

1. அன்னை தந்தையாவும் நீ. ஆதரிக்கும் தெய்வம் நீ:
யென்னையிந்த வேளைகார்த்து யெனக்கருள்
செய்யும் திருச்செந்தில்வளர்  சக்தி

2. போற்றிமதிக்க அறிகிலேன்
சாற்றிதுதிக்க தெரிகிலேன் யென்மேல்
வேற்றுமுகம் நீ-வகித்திடாமல் விரைவினில் வாரும்
வேல் கொண்டகர சக்தி



## இராகம் - செஞ்சுருட்டி - ஆதிதாளம்



பல்லவி

செந்தில்வேலா வந்தருள்வாய்திரு செந்தில்

அநுபல்லவி

செந்தில்வேலா உந்தன் பதம் பணிந்தேன் செந்தில்

சரணம்

1. க்ரௌஞ்ச கண்டன பாலா-காருண்யகுண சீலா
கந்தனே பக்த்தர் ஸொந்தனே யெந்தன் சிந்தை
[மகிழ திரு- செந்தில்
2. உன்பதம் தேடினேன்-உள்ளன் பால்நாடினேன் உருகி
[னேன்
என் முன்துரிதமாய் வந்துதெரிசனம் தந்துதிரு
[செந்தில்



## இராகம் - யமுனகல்யாணி - ஆதிதாளம்



பல்லவி

சரவண பவகுஹனே ஷண்முக சரவணபவகுஹனே

சரணம்

1. கரகமுனிவனுக்கு சிறுவருருவாகியே
அருளுபதேசஞ் செய்த யென்குருபர சரவண
2. ஹிமகிரி பார்வதி யீடுக்கும் கருணாநிதி
யெனக்கருள் செய்யவருவாய் திருச்செந்தில் சரவண



இருகம்-செஞ்சுருட்டி-தாளம்-திருஸ்சரம்



பல்லவி

ஆறுமுகவேலனே யெனக்கருள் செய்வாய் கந்தா உனே
யல்லால் வேறுகெதியுமில்லை யனுதைக்கி ஸொந்தா

சரணம்

1. அமரர் துயர்தீர்த்திட மலரினில் ஆருருவான
உன் அன்னை கிரிஜைஅனை த்தளவினில் ஒருருவானயே
[ஆரு
2. செந்தில் நகரில் வந்துபணிய சோந்தமில்லாதால்
நீ இந்தவிடத்தில் காக்ஷிதந்தெனக் கிரங்க வெண்ணு
[தாயே-ஆரு



இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-ரூபகம்



பல்லவி

எந்தன் மீதில் இந்தமோடி வந்ததேதோ கந்தா

அனுபல்லவி

கந்தனே குந்த தந்தனே பக்தர்
ஸொந்தனே அரவிந்த பதனே எந்தன்

சரணம்

1. பிரியமாய் திருச்செந்தில் வந்துன்
பேறருளைக் காணுமலே நான்
தேடியே மிகவாடியே அன்பால் நாடியே
புகழ் பாடிப் புலம்பும் எந்தன்
2. சூரமயின் மீதூன்றும் பதத்தில்
தூசுபடரு மையனே
பென்கோற மனதைப் பாதரக்ஷையாய்
கொண்டணிய நான்கண்டு மகிழ்வேன் எந்தன்



## இராகம் - கீர்வாணி - தாளம் சாப்பு



பல்லவி

திருச்செந்தில் வேலா-யென்- சிந்தைநொந்து ருகிய
வருத்தம் நீயறியாயேல் வருந்தேன் ஞானன்னை யென்
[திருசெந்தில்

சரணம்

1 அனுதினமுந்தன் அடியில்ப்பணியு மென
க்கனுகிரஹம் செய்யாமல் அலைக்காதே சூதாயென்
[திருசெந்தில்

2. சிவஸுதசீலா ஸதா தேவருக்கனுகூலா
சிறியேனை காத்திடும் தெய்வானைலீலா யென்
[திருசெந்தில்



## இராகம்-நாதநாமகிரியை-ஆதிதாளம்



பல்லவி

பாதார விந்தத்தில்ச் சேராய் வடிவேலா யெனக்
காதாரம் நீயல்லால் வேருரையும் போற்றறியேன் உன்
பாதார

சரணம்

1. உன்னை சிரமப்படுத்தி யெனக்குயர்ந்த பூஷணம்
[வேண்டாம்
உந்தன்னை அலைவித் தெனக்கு சத்துருஜெயம் வேண்
[டாம்யென்
கன்மனதை நலமாக்கி கருணாமிர்தம் அளித்து
யென்மனதின் பூஷணமாய் உன்பதத்தைத் தாரும்உன்
[பாதார



## இராகம்-தோடி-தாளம்-திறஸ்ரம்



பல்லவி

மஞ்சுவர்கனே காரும் அஞ்சும் யெந்தன் பயந்தீரும்
மஞ்சு

அநுபல்லவி

குஞ்சரியாள் மாரனே குறமாதுசோரனே மஞ்ச

சரணம்

1. பிரியமாய் அனுதினம் பிஞ்ஞகன் பாதத்தில்
விரியுமலரர்ச்சித்த கரியமால் மருகனே மஞ்ச
2. கர்ணவிபூஷண கண்டனவேலனே
ஸொர்ணகிரி ஸாதையாம் ஸாந்தரிபாலனே மஞ்ச



இராகம்-யெதுகுலகாம்போதி-தாளம்மிஸ்ரசாப்பு



பல்லவி

ஆண்டியாம் யிவனைநான் வேண்டிப் பணிந்தும்
யிரங்காத காரணம் யேண்டி.

அநுபல்லவி

காண்டீபன் புடையுண்ட காட்டாண்டிக் கருகாண்டி
பாண்டியன் பவுத்திர னென தாண்டி தன்னைமறந்தான்
[ஆண்டியாம்

சரணம்

1 அறிந்திருந்தும் யிந்திரன் அரியபெண்ணை யீந்ததாலோ
அண்டர் சேனாபதியென்றும் அதிகாரம் வந்ததாலோ
கண்டிருந்தும் விஷ்ணுவும் தன்கன்னியை கொடுத்த
[தாலோ
ரெண்டு பெண்டுடனேற மயில் நின்று கொண்டிருப்
பதாலோ ஆண்டியாம்

2. முன்மகனும் ஐங்கரனை யின்புற வளர்த்திடாமல்
பின்வந்த யிவனை அன்னைபிரிய மாய் வளர்த்த தாலோ
அன்புடனே, சங்கரன், அருகில் வைத்தணைத்த தாலோ
தென்புடனே லக்ஷர் நவர் சேவகம் செய்திடலாலோ
[ஆண்டியாம்



இராகம்-செஞ்சுருட்டி-தாளம்ரூபகம்



பல்லவி

ஸுப்ரமண்யன் பாதம் காண தூரிதமாய் வாடிநீ. வெகு
[தூரிதமாய்

சரணம்

1. அஸுரரை ஜெயித்துடன் திருஆலயம் வந்தான்
அரனை அங்கு பிரதிஷ்டை செய்து பாபம் களைந்தான்
2. தீரனிவனென மகிழ்ந்துடன் ராஜன் பெண்ணீந்தான்
மாதுலன் கார்முகில் வண்ணன் வியந்து கன்னியைத்
தந்தான் ஸுப்ரமண்யன்



இராகம்-மோகனம்ஜம்பை-தாளம்சாப்பு



பல்லவி

கந்தனே உனைநினைந்து மனம் வருந்தலாலே
கமலமலர்ப் பதம் அளிக்க வருவாய் முன்னாலே

சரணம்

1. சீர்கொண்டபதம் தேடிச் செந்தில் வந்துபணியவென்
தேகமது ஸொந்தமல்ல அங்குவரத்துணிய
கார்நிறத்தோன் மகளுடனுன் கழல்தனை நானணிய
கலாப மயில் மேல்வருவாய்கந்தஸுப்ரமண்ய-கந்தனே

2. மகளிருவருடனுன்னை மகிழதிருமாலும்
வானவரும் தானவரும் வந்து பணிந்தாலும்
அஹமெலிந்த-அடியேனுயிர் தரியே னொருகாலும்
அருமுகனே-யினியேனும் தயைசெய் மென்மேலும்
கந்தனே



இராகம் மோஹனம் ஆதிதாளம்



பல்லவி

செந்தில் வடிவேலா யென்முன் வந்தருள் செய்வாய்

அனுபல்லவி

சந்திவண்ணன் மகளும்-யிந்திரன் புதல்வியும்
சருவிடும் சருவிடும் சரவணபவகுஹனே திரு-செந்தில்

சரணம்

1. ஆரணனும் அரி நாரணனும் அரியாத
அனலுருவாகி நிறைந்தோன் பால
காரணனே பரிபூரணனே வள்ளி
சோரற மணனெனும் வாரணத் வஜகுஹ செந்தில்

2. பார்த்தனுடன் அமர்சேர்த்துத் திருமேனிவேர்த்து
விஜயன்கை வில்லடியுண்டோன் பால சேர்த்திடாய்
அருகில் யேர்த்திடாய் துதிபை பூர்த்தியாய்
யெண்ணுங்கார்த்தி கேயனே குஹ செந்தில்



## இராகம் கரகரப்பிரியா ஆதிதாளம்



பல்லவி

குருபரனே திருப்பரங்கிரி தன்னிலுறை குஞ்சரமே
யென்னெஞ் சகத்துள்ளே கூடியே வஸித்து நான் [கூறிய
வரந்தரும் கோமளா காகுஹனே யென்- குருபரனே

சரணம்

1, மறைமுறைபாடவும் வானப்பெண்ணாடவும்
இறைவர் கொண்டாடவும் யேனையர் நாடவும்
சரவண பவாவெனச் சாமரம் போடவெந்தன்
மனம் களித்திடவா குருபரனே

2. பன்னிரு தோளனே பங்கஜத் தாளனே
பாவைமணாளனே பக்தர் தயாளனே
குன்றிலிருந்திறங்கி கொடிய கானகக்குறக்
கன்னிபைக் களவுண்டவா குருபரனே



இராகம்-பரசு-தாளம் சாப்பு



பல்லவி

வடிவேலையனே-யென் வடிவேலையனே

சரணம்

1. அடியவர் துயர்தீற அரிய செந்தில் நகரில்
குடிகொண்ட தேசிககுஹனே ஷண்முகனே வடிவே
2. சரவணபவகுஹ-சங்கரிபாலனே.
தானவர்துயர் தீர்த்த ஷடக்ஷரப் பொருளே வடிவே



இராகம்-மாயாமயகௌளம்-ஆதிதாளம்



பல்லவி

செந்தில்வேலா வந்தனம் திருச் செந்தில்வேலா

சரணம்

1. உந்திக்கமலம்முடையோன்
தந்திமுஹஸகோதரா முருகா செந்தில்
2. காமனை யெரித்தக் கண்ணோன் பாலா
மாமன் மகளார் மருவிடும் லோலா செந்தில்



## இராகம்-யமுனாகல்யாணி-ஆதிதாளம்

பல்லவி

வேலன்பதத்தை த்யானம் செய்மனமே உமை
பாலன்பதத்தை த்யானம் செய்மனமே

சாணம்

1. மாலயன் போற்றிடும் மாமங்கன் சாற்றிடும்
வாரிஜபதத்தியானம்- செய்மனமே
மூராரி- மகிழத்தியானம் செய்மனமே- வேலன்

2. கடலினும் மலையினும் கடம்பனிடும் பன்போற்றும்
கார்திகேயனை தியானம் செய்மனமே
தார்த்தி தீர்போனைத் தியானம்செய்மனமே- வேலன்

## இராகம்கமாஸ்-ஆதி தாளம்

பல்லவி

வாரும்பால ஸுப்ரமண்யனே வர்ணமரகத மயில்மீது
வள்ளிக்குஞ்சரியுடன் வாரும்பால ஸுப்ரமண்யனே

அனுபல்லவி

காரும்கவியும் செந்தில் க்கடலருகினில்
சேரும் பதியும் திசைமுகனும் பணியும்- பாதா-வாரும்

சரணம்

1. மாது உமையவள்க்குப்பா- தியுடலம்யீந்தானும்மானும்
மழுவும்ட மருகமும் வ்பாக்கர உடையும் தரித்தானும்
பூதகணமும் சதுர்வேதமும் புகழ்ந்திடும்
புராரி அருகனே முராரிமருகனே வாரும்



இராகம்-மாயாமயகௌளம்-ஆதிதாளம்



பல்லவி

வேலன் பதம்பணிவோம் வடிவேலன் பதம் பணிவோம்
விகஸித மலரணிவோம்வடி வேலன்

சரணம்

1. மாலயனிந்திரனும் வணங்கும் பொற்பாதனடி
பாலஸவுனகர்க்குபிரணவத்தைபோதனடிவடி- வேலன்
2. மங்கையிருவருடன் மயங்கும் மணாளனடியெங்கு[illegible]
தீர்க்கவென யெப்போ நினைவானடி வேலன



இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்



பல்லவி

பச்சைமயில் வாஹா பச்த்த திவ்யபதம் காண
[வேணும்

சரணம்

1. மச்சவதாரன் மகிழ கெச்சை முழங்க செந்தினில்
இச்சைபா யிருவருடன் யேஹாஸனம மர்ந்த-பச்சை
2. பெண்டிருவர் வாதுசெய்தல் கண்டுஸஹியா மலப்போ
தெண்டு காஷாயம் தரித்து நின்று விட்டாயோ
[தவத்தில்- டச்சை



இ ரா க ம் - ஸா வே ரி - தா ள ம் - ரூ ப க ம்

யெஸ்ஸரிகை

1. தெக்ஷிணத் திசைதனிலே- லக்ஷருடன்
கூட நவலக்ஷருடன் கூட
பக்ஷமுடன் வந்தமர்ந்தபாலா யெஸ்ஸரிகா
வடிவேலா யெஸ்ஸரிகா
2. வாஸவனும் கேசவனும் நேசமுடன்வந்து
விஸ்வாஸமுடன் வந்து
பூஜை செய்ய புகழ்ந்த பூபதியே யெஸ்ஸரிகா
யெதிர் நிதியே யெஸ்ஸரிகா
3. இடபாஹங் குஞ்சரத்தி உந்தன் திட
பாஹத்தில் குறத்தி வீரமடவாருடன்
மயின்மேல் வரும்மன்ன யெஸ்ஸரிகா
உயர்குண யெஸ்ஸரிகா
4. செந்தில் வளர்நாதா உந்தன்சிந்தை இரங்காத
உந்தன் சிந்தை இரங்காதா
யெந்தன் மீதில்வாதா குருநாத யெஸ்ஸரிகா
நால்வர் போதா யெஸ்ஸரிகா

5. கடம்பமணம் வீச கஸ்தூரி கெந்தம் பூச
படர் சாமரம் வீச மகிழ் பைபா வெஸ்ஸரிகா அன்பர்
மெய்யாயெஸ்ஸரிகா



## கதவுதிறக்கும் பாட்டு



1. குன்றமர் வேலன் ரிஷி குண்டிணியுரை கொண்டு
கோதை வள்ளியை நினைந்தோடிநான் இரவில்
கூடிகுஞ்சரி வாசல் நாடினன்,
2. அன்னம்மே அமுதமே அலைவாய் குமுதம்மே
அரும் பொன் கதவைத்திறப்பாயே:யெந்தன்
ஆவல் கனெல்லாந் தவிர்ப்பாயே
3. வாசலைத்திறவென்று வம்புகள் பேசுகிறீர்
வந்தவர்யார்நீர் சொல்லும்
வாசல்ப்படிக்கி அப்பாலே போய்நில்லும்
4. அப்பாலிப்பாலென்று அதட்டியே பேசுகிறாய்
அறியாயோ யெந்தன்னைப் பெண்ணே-
மிகஅவமானம் செய்யாதேகண்ணே
5. கொடியசூரனை வெல்ல-கோரகாஷாயதெண்டம்
கொண்ட மர்ந்தார்போலது வேஷமாவன
குறத்தியைமணந்த சந்தோஷமா
6. மாமன் மகள்தனை மணர்வது வையஹத்தில்
வழக்கமல்லவோ அடிமானேமிக
மனஸ்தாபம் செய்கிறாய் செந்தேனே
7. வள்ளியை கொண்டபின் வந்தென்னைப் பார்த்த
துண்டோமதிமயங்கியிங்கு வந்தீரோ.
மூதனல் மர்தார மேனி குலைந்தீரோ

8. ராஜத்துசிகாமணியே நீ பேசுவது
ராஜீகதர்ம மல்லத்தனே
இப்போற ஜோகுணம் ஒங்குவதும் யேனே

9. உந்தனேமாலையிட்டநாள் முதலாக சற்றும் உள்ளங்
குளிர்ந்து அறியேனேகுறவள்ளி தனக்குறியோனே

10. ஆயிரமாற்றுத்தங்க அருமைபசுங்கிளியே
அன்னமே கோபம் கொள்ளாதே
யென்சொல் திண்ணமே சோபம் விள்ளாதே

11. வடிவுடமான்மகளை மறந்து மதிகெட்டென்மேல்
மையல்கொண்டுவரவும் ஞாயமா
சிருதைய்யனு மைக்கடுந்த வேகமா

12. வானர்கோன் மகளென்று வந்தேன் நானுன்னைக்காண
வம்புகள் பேசுகிறாய் யேண்டியுனே
மனத்திலெப்போதும் மறக்கேண்டி

13. ஆசைகொண்டவளுக் கஞ்சாமல் வந்தாளே மிக
ஆரவாரத்துடன் வந்தீரோ வெகு
ஆபரண புஷ்பம் தந்தீரோ

14. வேந்தன் மகளே நீ வேண்டும் பூஷணப் புஷ்பம்
விறைவினில் த்தருவேண்டி மாதே
நல்லவேளை வீணுக்காதேகோதே

15. இன்பவார்த்தைகள் பேசி-யேமாற்று கின்றீரோ
யினியவள்ளியே பாரியாம்-ஆம்-மிக
யிச்சைவைத்தவள் வைவாள் போம்

16. அஞ்சாளிவளென்று ஆருமுகன்கதவை
பஞ்சாக்ஷரத்தால்த்திறந்தானே யிந்திரன்
பாவை யுடனேசிறந்தானே

17. யேஹாந்தமாயிருந்து யிளங்கதிர் தோன்றும்முன்னே
யெழில்வேலன் வள்ளியெதிர்ப்போக
அவளையிளகைகோபமுமாக

18. வடிவேல... யேந்திய மன்னனே-நீருமிப்போ-
வானர் கோன்மகள ...ர்சென்றீரோ
கானில்வாக் குறைத்ததை-மற...

19. கெட்டாத செந்தேனே திலகம்மே உன...
தெய்வானைமுன்னே செல்வேனே உன்முன்
திருட்டு வார்த்தைகளைச் சொல்வேனே

20. குஞ்சரியாளிடம் குமரா-நீர்செல்லா விட்டால்
கோலங்கள்-மேனியில்யேனோ-
யிந்தக்காலத்து தர்மம்- இதுதானோ

21 கோபம் மிகச்செய்கிறாய்-குஞ்சரியாளையும் நான்
கொண்டவனல்லவோசொல்வாய்
உந்தன் சிந்தை-யிறக்கமில்லா-க்கல்லா

22. கானகத்திலென்னைக் கையைப் பிடிக்கும்போது-
கண்ணேநானுன்னைப் பிரியேனே யென்ற-
கபடமறியாமல் நம்பினேனே

23. கானகக் குறத்தியென்பதுனக்கே யேற்கும்
அவள்க்கும் கணவன்மேல் யிருக்காதோ-தாபம்-
ஒருக்கணம் பிரிந்ததற்கோஇக்கோபம்

24. பன்னிருகையன் சொன்ன-பரிகாஸ வார்த்தை கேட்டு
பத்மம்போல் முகம்மலர்ந்தாளே வள்ளி
பவ்யமுடனே யணைந்தாளே

25. கன்னியிருவருடன்-கலபமயின்மீதேறி
கடல்க்கரைச் செந்தில் அமர்ந்தானே
பக்தர்களங்கங்களெல்லாம் தவிர்ந்தானே



## தாலாட்டு- இராகம் நீலாம்புரி-



1. முக்கண்ணன் தன்மகனே [illegible]கவாகனனே
விக்கினங்கள் வாரா[illegible] விநாயகனே-முன்னடவாய்
2. [illegible] குலம்வேரறுக்க அரனார் தன்றிருநுதலில்
அனலுருவாய கங்கைவந்த ஆறுருவே கண்வளராய்
3. பூஸுரர்கள் வந்து-மலர்பொய்கைதனில் காணவுமே
புன்னகையாலக் கலிதீர்த்த பூரணனே கண்வளராய்
4. அன்னைஉமை அறுவரையும் ஆவலுடன் சேர்த்தணை
[க்க
அறுமுகமாய் நடுவிருந்த அய்யனே கண்வளராய்
5. ஐந்துவயதிலயனை அர்த்தம் விவகரித்து-அவன்
நொந்துவிடச் சிறையிலிட்ட நூல் பொருளே
[கண்வளராய்
6. அன்னைகையில் வேல்வாங்கி அதிகொடிய கரவுஞ்சகிரி
தன்னைப்பிளந்தெரிந்த ஷடக்ஷரனேகண்வளராய்
7. தாருகஸிம்மனைவென்று தருசூரபத்மனையும்
வீரமுடனே ஜெயித்தவேல்கரனேகண்வளராய்
8. கேசவன் வாசவனுடனே கீர்த்தியுள்ள செந்தில்வந்து
யீசனை பூஜைசெய்த யெழில்வேலாகண்வளராய்
9. தேவர்துதித்துவர தென்பரங்குன்றமடைந்து
தெய்வானைமணந்ததேவரசேகண்வளராய்
10. இருபுறமும் கன்னியர்கள் யிலங்கமயின்மீதேறி
மருமலர்ச் சோலைகளுலவும் மன்னனேகண்வளராய்
11. அன்பர் தொட்டிலிலே அரும்சிசு வாய்க் கண்வளர்ந்து
இன்புறும் ஞானம் யியற்றுங் குருபரனே கண்வளராய்



## காலைப்பாட்டு இராகம் பூபாளம்

1. செந்தில்வளர்சிவ . ஷண்முகநாதனே
சேவல் கொடி யோனேவாரும்
செங்கண்மால் திசைமுகன் தினம்வந்து பூஜிக்கும்
செங்கமலப் பதத்தைத் தாரும்
பக்தர்கள் சூழ்ந்தனர் பாடல்பயின்றனர்-
பன்னிரு கையனே வாரும்
பத்மசூரனைவென்று மச்சைமயிலேறிய
பால உன்னிருபதம் தாரும்

3. இருளெல்லாம் நீங்கிற்று யிளங்கதிர் தோன்றிற்று
யீராறுகரத்தோனே வாரும்
மருளற்ற ஜோதியே மங்கையீர் பாதியே
மலர்ப்பதத்திலென்னைச் சேரும்

4. சூரனைஸம்ஹாரஞ் செய்தசிரமத்தினால்
துயில் கிறதினாலே ஐயா
தோகையர் வாதுக்கு சொல்லுரைக்கஞ்சியே
தூங்குகிறதுபோல் உபாயம்

5. மாதுளன்மகளாரை-மணந்தவைபவத்தினால்
ஸாதுக்களை மறந்தீரோ
பாது காத்திடு மென்றும் பாடலும் பதினெட்டு பட
கவாத்தியமும்-துறந்தீரோ

6. குக்குடம் கூவலும் கோலமயில்த்வனியும் குழைகாதில்
கேழ்க்கவு மிலையே
திக்கெட்டும் துதித்திடும் சிவஸுப்ர மண்யனே சீக்
கிரம் யெழுந்திரும் தேவா சரவண ஸம்பவனே

## மங்களம்

## இராகம் கேதாரம் - தாளம் - திரிபுடி

1. சரவணபவனெனும்-ஷண்முக நாதன்க்கும்
மங்களம் ஜயமங்களம்
யென்வரத குருவாகிய வாரணத்வஜனுக்கும்
மங்களம் சுபங்களம்
2. புள்ளிமயி லேறிப-வள்ளி மணாளனுக்கும்
மங்களம் ஜெயமங்களம்
யெதிர்-துள்ளித் துதித்து நிதிதுகளர் சிப்பவனுக்கும்
மங்களம் சுபமங்களம்
3. பரங்கிரிதனிலிந்த்ரன் பாவையை மணந்தோன்க்கும்
மங்களம் ஜெயமங்களம்
யென்னையிரங்கியே. கார்த்திடும்- யீராறுகரனுக்கும்
மங்களம் சுபமங்களம்
4. அன்பரைக் கார்த்திடத் தென்புரம் பார்த்தோன்க்கும்
மங்களம் ஜெயமங்களம்
இன்பமாய் யென்துதி யீரார் செவியிலேலர்க்கும்
யேகன்க்கும் சுபமங்களம்



